முகப்பு :

திருவானைக்கா,
அருள்மிகு அகிலாண்டேசுவரியம்மை
உடனுறை ஜம்புகேசுவரர்
திருக்கோயிலின் தோற்றம்

# திருக்கோயில்

மாலை : 20 | காளயுக்தி ஆண்டு—ஆனித் திங்கள் ஜூன்—1978 | மணி : 9

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

ஆணையர் அவர்கள்,
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை — 600 034

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப்பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. 15—00 உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங்களுக்கு, ஒரு இதழ் ரூ. 1—25 வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் "சந்தாதாரர்" ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொருவரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக்—கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் *[PINCODE]* எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறையாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற்பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. 9—60 ஆகின்றது. ஆதலால் வெளிநாட்டுச் சந்தா, ரூ. 20—00-ல் இருந்து ரூ. 25—00 ஆக ஜனவரி 1978 முதல் மாற்றி அமைக்கப் பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப் போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்



ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

"என் கடன் பணி செய்து கிடப்பதே"

# உயர்ந்த ஒரு வழி

'அருண்மொழியரசு' திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

மனிதர்களாகிய நாம் மனதை யுடையவர்கள்; மனம் சிந்திக்குங் கருவி; கை செய்யுங் கருவி; அதனால் தெலுங்கில் கை செய் யென்றே வழங்குகின்றது; கால் நடக்குங் கருவி; வாய் பேசுங் கருவி; காது கேட்குங் கருவி; கண் காணுங் கருவி; ஆனால் கண் காண வேண்டியதைக் காண வேண்டும். காது கேட்க வேண்டிய இனிய அரிய நல்ல கேள்விகளைக் கேட்கவேண்டும்; வாய் உண்மையை இறைவனுடைய அருட் புகழையே பேசவேண்டும். உண்ணுகின்ற வாயை வாய் என்று பெரியோர் கூறுவதில்லை. ஒரு கூடை தவிடு, ஒரு படி பருத்திக்கொட்டை, ஒரு கட்டு புல் உண்டு ஒரு தொட்டிக் கழுநீரைக் குடிக்கின்ற அகண்ட பெரிய வாயையுடைய மாட்டை வாயில்லாத பிராணி என்கின்றோம். அதிக தீனியுண்ணுகின்ற யானையும் வாயில்லாத பிராணிதானே; ஆக பேச வேண்டியவைகளைப் பேசுகின்ற வாயே வாய்.

''கடியேறு மலரோனைக் கடுஞ்சிறையில் வைத்துப்
படியாதி எவ்வுயிரும் படைத்தருளும் பிரானை
முடியாத முதலோனை மூவர் பெருமானை
வடிவேலன் தனைப்பேசா வாயென்ன வாயே
வள்ளிமணாளனைப் பேசா வாயென்ன வாயே''

என்று மாயூரப் புராணத்தில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்கள், அவருக்கென்றே உரிய அரிய தமிழ் இன்னுரையால் கூறுகின்றனர்.

கைகளால் தான தருமம் புரிய வேண்டும். வறியவர்க்கு உதவி புரிய வேண்டும். நல்ல திருத்தொண்டுகளைச் சளையாமல் செய்ய வேண்டும்; கொடுத்துக் கொடுத்துக் கை நீள வேண்டும்; சிலருக்குக் கைவேறு வகையில் நீளுகின்றது. 'தருகை நீண்ட தயரதன்' என்று கம்பநாடர் கூறுகின்றார். தசரதனுக்குக் கரம் கொடையினால் நீண்டதாம். முருகப்பெருமானுடைய திருவுருவத்தைக் குறிக்க வந்த ஆதிசங்கரர் கூறுகின்றார்: 'புஜே சௌர்ய தைர்யம் கரே தானதர்மம்'.

முருகனுடைய கரங்களில் தான தருமங்கள் குடியிருக்கின்றன என்பது இதன் பொருள். சீதக்காதி என்ற ஒரு உத்தமனுடைய கரங்கள் ஈந்து சிவந்தனவாம். 'ஈந்து சிவந்தது சீதக்காதியின் இரு கரமே!' என்பது படிக்காசுப் புலவருடைய வாக்கு. இரண்டு கரங்களாலும் அள்ளித் தருவான் என்பது சிந்தனைக்குரியது. ''கரே தஸ்ய க்ருத்யம்'' என்கின்றார் மற்றொரு பாடலில். கைகள் ஆண்டவனுடைய பணிகள் புரிய வேண்டும். இது போல் மனம் நினைக்க வேண்டியதை நினைக்க வேண்டும். நற்சிந்தனையுள்ள மனமே நன் மனம்.

இறைவனுடைய பெருங் கருணையை இடையறாது நினைக்க வேண்டும். அவ்வண்ணம் நினைப்பதன் பயன் யாது? அப்பனுடைய அளவற்ற கருணையை ஆழமாக நினைக்கும்போது கருங்கல்லினும் திண்ணிய மனம் உருகும். நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்து உருகினால் சண்முகன் தஞ்சத்து அருள் புரிவான். ''உருகும் அடியவர் இருவினை இருள் பொரும் உதய தினகர'' என்கின்றார் அருண கிரிநாதர். 'உருகும் அடியார் இருவினைத் தொகை யறுக்குமவன்' என்பது பூத வேதாள வகுப்பு. ''ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்'' என்றும், ''கலந்த அன்பாகிக் கசிந்துள் உருகும் நலம்'' என்றும் கூறுகின்றார் மணிவாசகர்.

இறைவனுடைய கருணையை எண்ணினால் எந்தக் கருங்கல் மனந்தான் உருகாது. உலகிலே சிறிய உதவிகளைச் செய்தவர்களை நினைத்தாலே நெஞ்சம் நெகிழ்கின்றது. இறைவன் தாயினும் சாலக் கருணை புரிகின்றான். தாய் இப் பிறவிக்கு மட்டும் உரியவள், இறைவன் பிறவிகள் தோறும் தாயாக விளங்குகின்றான். 'தொடர்ந்து நின்ற தாயான'' என்கின்றார் அப்பரடிகள். இறைவனுடைய கருணை ஆயிரம் ஆயிரம் வகையாக அமைந்திருக்கின்றது. அவற்றுள் ஒன்று இரண்டு நினைவு கூர்வாம். இந்த உடம்பை அருமையிலும் அருமையாக ஆக்கித் தந்தனன். இந்த உடம்புக்குள் எத்தனை எத்தனை வகையான நுண்ணிய கருவிகள் இவற்றையெல்லாம் நாமே படைத்துக் கொள்ள இயலுமா?

நாம் தாய் வயிற்றில் இருந்தபோது நமக்கு இறைவன் உணவு தந்துள்ளான். பெற்ற பின்னர் தாய் பால் தருகின்றாள். கருவில் உள்ள குழவிக்கு அவளால் உணவுதர இயலாது.

''கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லுக்குள் தேரைக்கும்
விருப்பொடு உணவளிக்கும் ஈசன்''

என்கின்றார் ஔவையார்.

''ஈயறியாப் பசுந்தேனே
எழுத்தறியா மறைப்பொருளே
காயறியாச் செழுங்கனியே
கற்பகத்தின் பசுங்கொழுந்தே
தாயறியாக் கருவிலிருந்து
அமுதூட்டுந் தாய்த்துணையே
நீயறியாச் செயலுளதோ
நிகில பரம்பர மூர்த்தி!''

என்பது திரிகூடராசப்பக் கவிராயருடைய தென்றமிழ் வாக்கு. கருவில் உள்ள குழந்தைக்கு இறைவன் உணவு ஊட்டுவதற்குச் சான்று, பிறந்தவுடன் அக்குழவி கருமையாக மலம் போடுகின்றது. அதைக் காட்டுமலம் என்பார்கள். அன்றியும் அக்குழவி பிறக்குமுன் தாய்க்கு இரு தனபாரங்களில் பால் சுரக்க அருள்புரிகின்றான்.

சைக்கிள், மோட்டார், பஞ்சாலை முதலிய இயந்திரங்களுக்கு அடிக்கடி கிரீஸ் போடுகின்றார்கள். இல்லையேல் அவைகள் எளிதாக இயங்கா. நமது உடம்பில் முழங்கால்கள், முழங்கைகள், மணிக்கட்டுகள், விரல்கள் இவைகளின் இடையே யார் 'கிரீஸ்' விடுகின்றார்கள்? இவைகள் பிறந்தநாள் தொட்டு இறக்கும்வரை வளைந்து வளைந்து எளிதாகத் தொழில்புரிய ஒருவகைப் பசை அவைகளுக்குள் உண்டாகுமாறு இறைவன் அமைத்திருக்கின்றான். இந்தக் கருணையை நாம் நினைக்கின்றோமா? இவ்வண்ணம் இறைவன் அருளவில்லையானால் இந்தக் கைகளால் நாம் ஒரு வேலை செய்ய முடியுமா? நடக்க முடியுமா? இருக்க முடியுமா? நன்கு சிந்தியுங்கள். அவன் கருணையை நினைக்க வேண்டாமா? நினைத்து உருகவேண்டாமா?

கள்ளுருகு மலர்மணம்போல் கலந்தெங்கும்
கலந்தோய்நின் கருணைக்கு அந்தோ
முள்ளுருகும் வலியபராய் முருடுருகும்
உருகாத முறைசேர் கல்லும்
வள்ளுருகும் மலையுருகும் மண்ணுருகும்
மரமுருகும் மதியி லேன்தன்
உள்ளுருகும் வகையிலை என் செய்கேன் நான்
ஏன் பிறந்தேன் ஒதிய னேனே.

என்று இராமலிங்க அடிகளார் கூறும் இந்த இனியபாடலைப் பலமுறை படியுங்கள். எத்துணை உணர்ச்சியில் இந்தப் பாடல் எழுந்தது என்று சிந்தியுங்கள். இறைவனுடைய கருணைத் திறத்தில் மற்றொன்றைக் கூறுகின்றேன்.

இந்த உடம்பை அமைத்து அதில் உயிரையும் தங்குமாறு அமைத்துள்ளார். ஒன்பது ஓட்டைக்குள் பிராணவாயு சென்று சென்று திரும்புகின்றதே? இது யார் செய்த திறம்? நாம் பிராணவாயுவை விடும்போது மீளவும் அதனைக் கவனமாக உள்ளுக்குச் செலுத்துகின்றோம்? உரையாடும்போதும் உறங்கும்போதும் தொழில் புரியும்போதும் அந்த மூச்சு சென்று சென்று திரும்புகின்றதே? வெளிப்பட்ட மூச்சு அப்படியே போய் விடலாந்தானே? அவன் அருளால் அல்லவா அது பெயர்ந்தும் உடலுக்குள் மீளுகின்றது. மூச்சும் பேச்சும் அவன் அருளால் இயங்குகின்றன. பரம் கருணாநிதியாகிய எம்பெருமான் நம்மை வாழ்விக்கும் பொருட்டு இந்தப் புன்புலால் யாக்கையுள் தானும் புகுந்து இருந்து இதனை இயக்கிக் கொண்டிருக்கின்றான். அதனால் அவன் இயவுள் எனப்படுகின்றான்.

''புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி எளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே''

என்ற திருவாசகத்தைப் படியுங்கள். இன்னும் ஒரு திருக்கருணையை நினையுங்கள்.

இந்த உடம்பை ஆண் பெண் இருபாலார் கட்கும் வேறு வேறு விதமாகவே உலகந் தோன்றிய நாள்தொட்டுப் படைக்கின்றார். ஒருவர்முகம்-மூக்குபோல் மற்றொருவர்முகம்-மூக்கு இல்லை. ஐந்து கண்டங்களிலும் உள்ள முந்நூறு கோடி மக்களுக்கும் வேறு வேறு வடிவ அமைப்பை அமைத்தார். இதற்கு என்ன காரணம்? நன்கு ஊன்றி உன்னுங்கள்.

ஒருவேட்டி புடவை நெய்கின்றவன் எத்தனை விதங்கள் அமைக்க முடியும்? இறைவன் வேறு வேறு முகச்சாயல் அமைக்கவில்லையானால் மனித வாழ்க்கை புனித வாழ்க்கையாக அமைய முடியுமா? எல்லாப் பெண்களுக்கும் ஒரே மாதிரியான முகமிருந்தால் அவரவர்கள் தத்தம் மனைவியை வேறு பிரித்து அறிந்து ஒழுக்கமாக வாழ இயலுமா? அவ்வண்ணமே மகளிர் தத்தம் கணவன் என்று அறிந்து கற்புநெறியுடன் வாழ்க்கை நடத்த முடியுமோ? வேட்டிகளைத் தூய்மைப்படுத்தும் ஏகாலி உடைகளுக்குச் சில குறியீடுகள் போட்டு வைப்பான். அவரவர் உடைகளை அவரவர்பால் சேர்க்கும்பொருட்டு. இல்லையேல் ஒருவருடைய ஆடை மற்றொருவர்பால் செல்லும். அதனால் சுகாதாரங் கெடுமன்றோ? உடையை மாற்றியுடுத்ததனால் சுக்கிரருடைய மகள் தேவயானைக்கும், இடபபன்மனுடைய (விருஷபர்வா) மகள் சர்மிஷ்டைக்கும் பெரிய கலகம் வந்து இடர்ப்பட்ட வரலாறு மகாபாரதத்தில் வருகின்றது.

அதுபோல் பார்த்த மாத்திரத்தில் 'இவள் நம் மனைவி' 'இவர் நம் கணவர்' என்று அறிந்து வாழ்வதற்காகவே வேறுவேறு உருவ மாறுபாடுகளை இறைவன் அமைக்கின்றான். உலகந் தோன்றிய நாள்தொட்டு உலகம் ஒடுங்குகின்ற வரை தோன்றுகின்ற அத்தனை பேருக்கும் வேறுவேறு அச்சுமாற்றிப் படைக்கின்ற இறைவனுடைய பேராற்றலையும் பெருங் கருணையையும் நினைந்தால் உள்ளம் மட்டும் உருகாது, என்பும் உருகும். உள்ளம் உருகி உணர்வு உருகி ஊன் உருகி என்பும் உருகினால் கண்ணீர் ஒரு துளி இரு துளியாகவா வரும்? ஆறுபோல் பெருகும். பட்டினத்துச் சுவாமிகள் கூறும் இந்த அரிய பாடலைப் பாருங்கள்.

நீறூர்த்தமேனி உரோமஞ் சிலித்துளம் நெக்குச்
சேறாய்க் கசிந்து கசிந்தே யுருகிநின் சீரடிக்கே
மாறாத்தியானமுற் றானந்தமேற் கொண்டு மார்பிற்
கண்ணீர்
ஆறாய்ப் பெருகக் கிடப்ப தென்றோகயிலாயத்தனே.

தாயுமானவர் இதுபற்றி வருந்திக் கூறுகின்றார்:

''கல்லேனும் ஐய ஒருகாலத்தில் உருகும்என்
கல்நெஞ்சம் உருகவில்லையே''

''என்பெலாம் நெக்குடைய, உரோமம் சிலிர்ப்ப, உடல்
இளக, மனது அழலின் மெழுகாய்
இடையறாது உருக; வருமழைபோல் இரங்கியே
இருவிழிகள் நீர் இறைப்ப,
அன்பினால் மூர்ச்சித்த அன்பருக்(கு) அங்ஙனே
அமிர்த சஞ்சீவிபோல் வந்து,
ஆனந்த மழை பொழிவை; உள்ளன்பிலாத எனை
யார்க்காக அடிமை கொண்டாய்''

இறைவனிடத்தில் நாம் ஏதேதோ வேண்டும் என்று குறையிரந்து வேண்டுகின்றோம். பொன்வேண்டும், பொருள்வேண்டும், வீடு வேண்டும், மாடு வேண்டும், பதவி வேண்டும், உதவி வேண்டும் என்றெல்லாங் கேட்கின்றோம். எதைக் கேட்கவேண்டும் என்று நமக்குத் தெரியவில்லை. மேற் கூறியவையெல்லாம் இந்திரஜாலம்போல் கனவு நிலைபோல் தோன்றி மறையக் கூடியவைகள்தாமே. அவைகளால் நமது ஆன்மாவுக்கு என்ன பயன்? எத்தனை செல்வமிருந்தாலும் உண்பது நாழி; உடுப்பது நான்கு முழந்தானே? பல வீடுகள் இருப்பினும் படுப்பது ஆறடி இடத்தில்தானே?

நெசவுத்தொழில் செய்கின்ற ஒருவன் காட்டில் சென்று கடவுளை நோக்கித் தவஞ் செய்தான். அவன் கடுந்தவத்துக்கு இரங்கிக் கடவுள் தோன்றினார். ''அன்பனே! உனக்கு என்ன வரவேண்டும்?'' என்று கடவுள் வினவினார். அறிவில்லாத அந்த அசடன், 'சுவாமி' எனக்கு எட்டுக் கைகள் வேண்டும்'' என்றான். கடவுள் சிரித்து, ''ஏனப்பா? உனக்கு எட்டுக் கைகள் எதற்கு?'' என்று வினவினார். ''தெய்வமே! நான் நெய்கின்றவன். எட்டுக் கரங்கள் இருந்தால் ஒரே சமயத்தில் நாலு புடவைகள் நெய்வேன். அதிக வருவாய் வரும், என் வறுமை தீரும்'' என்றான். கேட்ட வரந் தருகின்ற ஆண்டவன் அவ்வண்ணமே தந்து மறைந்தனர்.

எட்டுக் கரங்களும் ஒரே உடம்பில் இருப்பதால், ஒரு புடவைதான் நெய்ய முடியும் என்பதை அந்த மந்த மதியாளன் உணரவில்லை. எட்டுக் கரங்கள் அவனுக்கு முளைத்தன. அவன் ஊருக்கு வந்தான். அவனைக் கண்ட ஊரவர் ''இவன் ஒரு அரக்கன் போலும்; எட்டுக்கரங்களால் நமக்கு இடர்புரிவான்'' என்று கருதி அஞ்சி எல்லோரும் ஒன்று கூடித் தடி எடுத்து அடித்து அவனைக் கொன்று போட்டார்கள். அம்முடன் வாங்கிய வரம் அவன் உயிருக்கு இறுதியைத் தந்தது. இப்படி நாம் விபரீதமான வரங்களைக் கேட்கக் கூடாது. பொன்னும் பொருளும் ஒரு அளவில் இருந்தால் சரி, அளவுக்கு அப்பால் போனால் அவை பெருந் துயரைத்தரும்.

குறிப்பதற்கு ஆறு அல்லது குளத்தில் தண்ணீர் இருக்க வேண்டும். மார்பளவு இடுப்பளவு இருந்தால் அபாயம் இன்றிக் குளிக்கலாம். ஆனால் மிகுந்த ஆழமாக இருந்தால், அந்த நீரே நம்மைக் கொல்லுமல்லவா?

ஞான சூரியராக விளங்கிய அருணகிரிநாத சுவாமிகள் முருகனிடம் வரம் கேட்கின்றார். எதனைக் கேட்டார்? இதோ பாருங்கள் அவர் கேட்ட வரும்.

''முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்?''

இறைவனே! இளம்பூரணனே! உனது திருவடியை நினைத்து என்று உள்ளம் உருகுமாறு அருள்புரிவாய் என்பது தான் வரம். இவ்வாறு முதலில் ஊன் உருகி உள்ளம் உருகி உணர்வு உருகி என்பு உருகினால் இறுதியாக நம் உயிர் உருகும். இதுதான் இறுதிநிலை. இறைவன் உயிர்க்கு உயிராய் விளங்குகின்றான். நன்கு கவனியுங்கள்.

ஒரு தங்கத்தின்மீது ஒரு இரத்தினக்கல் இருக்கின்றது. அத்தங்கம் உருகினால் அம் மணி தங்கத்தில் நன்கு அழுந்திப் பதிந்து கொள்ளும். அதுபோல் நமது உயிராகிய தங்கத்தின்மீது இறைவனாகிய இரத்தின மணி விளங்குகின்றது. உயிர் உருகியவுடன் இறைவன் அந்த உயிரில் ஒன்றுபட்டுவிடுகின்றான். ''நீராயுருக்கி என் ஆருயிராய் நின்றானே' என்று இந்தக் குறிப்பை மாணிக்கவாசகப் பெருமான் நமக்கு உபதேசிக்கின்றார்.

''உள்ளம் உருகின் உடனாவர் ல்லது
தெள்ள அரியரென் றுந்திபற
சிற்பரச் செல்வரென் றுந்திபற''

என்பது திருவுந்தியார் திருவாக்கு. எனவே நாம் இறைவனுடன் இரண்டறக் கலந்து இடையறாது பேரின்பத்தைப் பெறுவதற்கு உயர்ந்த ஒருவழி இறைவனுடைய திருவருளை நினைந்து உள்ளம் முதலிய அனைத்தும் உருகி நிற்றலாம்.

***

# சிவஞான போதத் தெளிபொருட் சுருக்கம்

[ந. ரா. முருகவேள், M.A., M.O.L.] (முற்றொடர்ச்சி)

## மூன்றும் சூத்திரம்



''உளது-இலது என்றலின்; எனதுடல் என்றலின்;
ஐம்புலன், ஒடுக்கம் அறிதலின்; கண்படில்
உண்டி,வினை இன்மையின்; உணர்த்த உணர்தலின்;
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா!''

இம் மூன்றும் சூத்திரம் இலது என்றல், எனதுடல் என்றல், ஐம்புலன் அறிதல், ஐம்புலன் ஒடுக்கம் அறிதல், கண்படில் உண்டியும் வினையும் இன்மை, உணர்த்த உணர்தல் என்னும் அறுவகை ஏதுக்களானும், ''மாயா இந்திர தனு'' எனும் பெயர் அடைமொழியாற் பெறப்படும் குறிப்பேதுவானும், இவைகள் எல்லாவற்றினும் வேறுக இவ்வுடம்பினுள் உயிர் எனப்படுவது ஒன்று உண்டு என்று அறிவுறுக்கும் பொருள் உடையதாகும்.

முதன்மை யுடைமை பற்றி உலகிற்கு நிமித்த காரணமாகிய பதிப்பொருள் உண்டு என்பு; முதற் சூத்திரத்துட் கூறினர். காரண மாதற் பொதுமையான் இயைபுடைமை நோக்கித் துணைக் காரணங்களது உண்மையும் அவற்றன் உலகம் காரியப்படுமாறும் இரண்டாம் சூத்திரத்துட் கூறினர். அவற்றனுய பயன் கோடற்குரிய பசுக்களின் உண்மைக்குப் பிரமாணம் ஈண்டுக் கூறப் புகுகின்றார் என்பது சிவஞான முனிவரர் பெருமானின் குறிப்பு.

காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுளுண்மையினை அறிவுறுத்தவேண்டியிருத்தலின், முதற் சூத்திரத்தின்கண் 'தோற்றிய திதியே' எனவும், 'ஒடுங்கியுளதாம்' எனவும் உலகின்மேல் வைத்துக் கூறியவாறு போலக்— காணப்பட்ட உடம்பாற் காணப்படாத உயிருக்கு உண்மை கூற வேண்டுதலின், இவ்வுடம்பு சூனியம் முதலியவற்றின் வேறுய ஆன்மாவையுடையது என்னும் கருத்துப்பட, உடம்பின் மேல் வைத்து ''மாயா இந்திர தனுவினுள் ஆன்மா உளது'' என்று ஆசிரியர் ஓதியருளினர்.

உயிர் என்பது ஒன்றில்லை என்னும் சூனிய ஆன்மவாதி, உடலே உயிர் என்னும் தேக ஆன்மவாதி, ஐம்பொறிகளே உயிர் என்னும் இந்திரிய ஆன்மவாதி, அகக் கருவிகளே உயிர் என்னும் அந்தக்கரண ஆன்மவாதி, நுண்ணுடலே உயிர் என்னும் சூக்கும தேக ஆன்மவாதி, உயிர்ப்புக் காற்றே உயிர் என்னும் பிராண ஆன்மவாதி, பிரமப் பொருளே உயிர் என்னும் விஞ்ஞான ஆன்மவாதி, இவைகள் யாவும் கலந்த தொகுதியே உயிர் என்னும் சமூகான்மவாதி ஆகிய எண்மதங்களும் ஈண்டு மறுக்கப்படுதற்குரியன. எனினும், உயிரின் இலக்கணம் கூறப்பெறும் நான்காம் சூத்திரத்தின் தொடக்கத்தில், அகக் கருவிகளே உயிராதல் வேண்டும் என்னும் அந்தக்கரணன்ம வாதிகளின் கூற்று மறுத்தொழிக்கப்பட இருத்தலின், அவரை ஒழித்து ஒழிந்த எழுவர் மதங்களை மட்டுமே, ஈண்டுத் தனித் தனியே எடுத்து முறையாக மறுத்து, உயிருண்மையை ஆசிரியர் நிறுவுகின்றார். எனவே, இச்சூத்திரம் ஏழு அதிகரணங்களை உடையதாயிற்று.

(1) அவற்றுள் ''ஈண்டு இலது என்றலின் ஆன்மா உளது'' என்பது சூனியான்மவாதத்தினை மறுத்தற்கு எழுந்தது. ஆன்மா இல்லை என்பதே பற்றி அஃதுண்டு எனக் கொள்ளுதல், முயற்கோடு இல்லை என்பது கொண்டு, அஃதுண்டு என்று நிறுவப் புகுதல் போல முறையில் செயலாம் எனச் சிலர் நினைப்பர். ''இலது என்றலின் ஆன்மா உளது'' எனக் கூறிய ஆசிரியர் கருதிய பொருள், அவர்கள் கருதுவதின் வேறுபட்டதொன்றாகும். உயிர் என்ப தொன்றில்லை எனக் கூறும் சூனியான்மவாதிகள், அங்ஙனம் கூறுங்காலும் 'இல்லை' என வாளா கூறிவிடாது காரணம் காட்டியே கூற வேண்டுதலின், ''நாடியோ? என்போ? நரம்பு சீக்கோழையோ? தேடி எனை யறியேன்!'' என்றற்போல, உடல் பொறி முதலிய அனைத்தினையும் முறையே ஆராய்ந்து, இஃது உயிரன்று இஃது உயிரன்று என ஒவ்வொன்றாகக் கழித்து, முடிவின்கண் இவ்வாறுகலான் உயிர் என்பதொன்றில்லை எனத் துணிந்து மொழிவர். அவர்கள் அங்ஙனம் மொழிதற்கு ஏதுவாக ஒவ்வொன்றினையும் உயிரன்று என ஆராய்ந்து கழிக்கும் அறிவு ஒன்று எஞ்சி நிற்றலின், ''அன்று அன்று என நின்று அனைத்தும்விட்டு, அஞ்செழுத்தாய்நின்று, ஒன்று உளது. அதுவே நீ'' என்னும் வரிகளால், இலது இலது என்று கூறி ஒவ்வொன்றையும் உயிரன்று எனக் கழித்து நிற்கும் அவர்தம் அறிவே உயிர் என ஆசிரியர் தெளிவிக்கின்றார். அங்ஙனம் அறிவும் அறியும் சூன்யமே எனின், அஃது 'என்னை ஈன்றாள் மலடி' என்பது போன்ற பொருந்தாக் கூற்றாகும். எனவே, இலது இலது என்று கூறி நிற்கும் அறிவாகிய ஆன்மா உளது எனத் தெளிவிக்கப் பெற்றது.

(2) தேகான்ம வாதிகள், மேற்கூறிய அவ் வறிவு உடம்பின்கண் அல்லது நிகழக்காணுமை யானும், நான் பருத்தேன்—இளைத்தேன்—கரியேன்—மனிதன்—பார்ப்பான் என உடம்பினையே நான் என்று வழங்கக் காண்டலானும், உடம்பே உயிர் என்பர். நான் இளைத்தேன் — பருத்தேன் — கரியேன் — மனிதன் — பார்ப்பான் என்பன முதலாக வழங்குங்கால் உடம்பின் குண விசேடங்களையே உபசாரத்தால் அதனுடன் கலந்தியைந்துள்ள உயிருக்கு ஏற்றி வழங்குகின்றோம். அதுபற்றி உடம்பே உயிர் என்றல் பொருந்தாது. யான் உடம்பு, யான் கை, யான் கால் என உடம்பை யாரும் வழங்குவதில்லை. என்னுடம்பு, என்கை, என்கால் எனவே வழங்கக் காண்கின்றோம். என்ஊர் என்வீடு என்மனைவி என்பொருள் என்று கூறுங்கால், ஊரும் வீடும் மனைவியும் பொருளும் நம்மின் வேறுதல் போலவே, என்னுடம்பு என் கை என் கால் என்புழியும் உடம்பு கை கால் முதலியன நம்மின் வேறுதல் பெறப்படும். எனவே, யான் என்று குறிப்பிடப்படுவதாகிய உயிரும், எனது எனக் குறிப்பிடப்படுவதாகிய கை கால் கண் செவி உடம்பு முதலிய பிறவும் வேறு வேறு என்பது புலனாகும். ஆகவே, உடம்பே உயிர் என்னும்கொள்கை பொருத்தமின்மை தெளியலாம். இதனையே ''என்பதி என்மனை என்றாற்போல என் கை, என் கால் என நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம்'' என்னும் கருத்துப்பட ''எனது உடல் என்றலின் ஆன்மா உளது'' என்று ஆசிரியர் விளக்கினார்.

*''உற்றதை உணரும் உடலுயிர் வாழ்வுழி*
*மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடில்*
*தடிந்தெரி ஊட்டினும் தானுண ராதெனின்*
*உடம்பிடைப் போனதொன் றுண்டென உணர்நீ!''*

எனச் சாதுவன் என்பான், நாகர் தலைவனுக்குக் கூறும் மணிமேகலைப் பகுதியும் ஈண்டு ஒப்பு நோக்கி உணர்தற்குரியது.

(3) இந்திரியான்ம வாதிகள், ஐம்பொறிகள் ஐம்புலன்களை அறியும் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவை உடல்போற் சடம் அன்மை பெறப்படுதலானும், அவற்றை 'எனது' என்னும் வழக்கம் பெரும்பான்மையன்றாகலானும், ஐம்பொறிகளே உயிராதல் அமையும் என்பர். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தினையும், ஐம்பொறிகளுள் ஒன்றறிந்தது ஒன்றறியாது. நாக்கு சுவையொன்றையுமே அறியும், ஒளியை அறியாது. கண் ஒளியை மட்டும் அறியும், நாற்றத்தினை அறியாது. இங்ஙனமே பிறவும். ஐம்பொறிகள் அவ்வவற்றிற்குரிய ஐம்புலன்களையும் அறியுமாயினும், இத்தொழிற்பாட்டையுடையேம் யாம் என்றறிய வல்லன வல்ல. எனவே, தனித் தனியே ஓரொரு புலனை மட்டும் அறிகின்ற பொறிகள் ஐந்தினும் வேறாக, கண் உருவத்தை யறிவது, செவி ஓசையை அறிவது என்றிவ்வாறு உணரவல்லதாய், அவ்வைம்பொறிகளாலும் ஐந்து பயன்களையும் ஒரு சேர நுகர்வ தொன்றுண்டு! அதுவே உயிராகும் என்பது ஆசிரியர் கருத்து. இதனையே,

*ஒன்றறிந்தது ஒன்றறியா தாகி, உடல்மன்னி*
*அன்றும் புலன்ஆய் அவ்வஞ் செழுத்தை—ஒன்று*
*அறிதல்*
*உள்ளதே யாகில், அதுநீ! தனித்தனிகண்டு*
*உள்ளல(அ)வை! ஒன்றல்லஓர்!''*

என்னும் கருத்துப்பட ''ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது'' என்று ஆசிரியர் சுருக்கமாகக் குறிப்பிட்டார். ''ஐம்புலனாகிய சத்த பரிசரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியாமையின், இவ்வைந்தினானும் ஐம்புலனும் அறிவது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம்'' என்னும் பொழிப்புரை இவ்வுண்மையை , எளிமையாகவும் தெளிவாகவும் விரித்துரைத்தல் காணலாம்.

(4) சூக்கும தேகான்ம வாதிகள், இந்திரியங்கள் உயிரல்லவாயினும், அவ்விந்திரியங்களின் வேறாய் அகத்தே நின்று அவற்றைப் புறத்தே செலுத்தி அறிவதாகிய புரியட்டகவுடம்பு எனப்படும் சூக்கும தேகமே உயிராகும் என்பர். சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்தனோடு, மனம், புத்தி, அகங்காரம் என்னும் மூன்றுமாகிய எட்டும் சேர்ந்தது புரியட்டகம் எனப்படும். புரியட்டகம், சூக்கும தேகம், நுண்ணுடல் என்பன ஒரு பொருட் கிளவிகள். கனவின்கண் நிகழ்வனவற்றை அறிவது இச் சூக்கும தேகமேயாகும். எனவே இச்சூக்கும தேகமே உயிராகுமாயின், கனவின்கண் கண்டவற்றை நனவின்கண் மயங்காது அறிதல் வேண்டும். அவ்வாறின்மையின், நனவின்கண் தூலவுடம்பொடு கூடியும், கனவின்கண் சூக்குமவுடம்பொடு கூடியும் இயங்கி, அந்நிலை வேறுபாடுகளால் மயங்கி மயங்கி அறிந்துவரும் இயல்பிற்றாகிய பிறிதொரு பொருள், சூக்கும தேகத்தின் வேறாக இருப்பது புலப்படும்.

*''அவ்வுடலின் நின்றுயிர்ப்ப, ஐம்பொறிகள் தாம்*
*கிடப்பச்*
*செவ்விதின் அவ்வுடலிற் சென்றடங்கி—அவ்வுடலின்*
*வேறென்று கொண்டு விளையாடி மீண்டு,அதனை*
*மாறல்,உடல் நீஅல்லை மற்று!''*

என்றபடி, சூக்கும தேகத்தின் வேறாகிய அப் பொருளே உயிர் எனப்படும். இவ்வுண்மையே ''நனவின்கட் கனவு கண்டாம் என்றும், கண்டிலம் என்றும் நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம்'' என்னும் கருத்தமைய ''ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது'' என ஆசிரியரால் விளக்கப்பட்டது.

(5) பிராணான்மவாதிகள், சூக்கும தேகம் சொப்பனத்தானமாகிய கனவின்கண் மட்டுமே தொழிற்படுவது; ஆனால் பிராணவாயுவாகிய உயிர்ப்புக் காற்றே, உறக்கம் பேருறக்கம் ஆகிய சுழுத்தி துரியங்களினும்தொழிற்படுவது; ஆதலால் பிராண வாயுவே உயிராம் என்பர். எல்லாக் கருவிகளோடும் கூடிய நிலையில் விழித்துக் கொண்டிருக்கும்போதும், எல்லாக் கருவிகளும் ஒடுங்கிய நிலையில் உறங்கிக் கொண்டிருக்கும்போதும், பிராணவாயு உடலில் ஒரு தன்மையாகவே இயங்கிக் கொண்டிருக்கிறது. அங்ஙனமாகவும் விழித்திருக்குங்கால் உடம்பிற்குப் பொருள்களின் இடமாக வரும்

இன்ப துன்ப நுகர்ச்சியும் தொழிற்பாடும் உடம்பின்கண் நிகழக் காண்பதில்லை. இவ்வேறு பாட்டிற்குக் காரணம் என்னை? இதனை ஆழ்ந்து ஆராய்ந்தால் பிராண வாயு ஒரே தன்மைத் தாக இயங்கிக் கொண்டிருப்பினும், விழிப்பு நிலையில் உடம்புக்கு இன்ப துன்ப நுகர்ச்சியும் தொழிற்பாடும் நிகழுமாறு கருவிகளையெல்லாம் கூட்டுவித்தும், உறக்க நிலையில் அவை நிகழாத வாறு கருவிகளை யெல்லாம் ஒடுக்குவித்தும் இயக்கி வரும் ஒரு பொருள், பிராணவாயுவின் வேறாக உடம்பின்கண் நிற்றல் தெளியலாம்.

''கண்டறியும் இவ்வுடலே காட்டுஒடுங்கக்காணுதே,
உண்டி,வினை இன்றி, உயிர்த்தலால்—கண்டறியும்
உள்ளம்வேறு உண்டு! ஆய்! ஒடுங்காது உடல்நண்
ணில்
உள்ளதாம் உண்டிவினை ஊன்!''

இவ்விரிந்த கருத்தினையே ''கண்படில் உண்டி வினை இன்மையின் ஆன்மா உளது'' என ஆசிரி யர் சூத்திரத்துட் சுருக்கமாகக் குறிப்பித்தார்!

*(6)* விஞ்ஞானஆன்மவாதிகள், மேலே கூறிப் போந்த உடல் பொறி வளி முதலிய சடப் பொருள்களைப் போலன்றிப் பிரமப் பொருள் பேரறிவுடைய சித்துப் பொருளாகலான், அப் பிரமப் பொருளே உயிராகும் என்பர். கருவி களின் துணையின்றி அறிய மாட்டாததாயும், கருவிகளோடு கூடியறியுமிடத்தும், ஒருங்கே அறியமாட்டாது ஒரோவொன்றனையே அறிந் தும், ஒன்றனையறியப் புகுவதாயும், முன்னறிந் ததனைப் பின்னர் அறியாது மறந்தொழிந்தும், பலவாறு ஐந்தவைத்தைப் பட்டுவரும் இயல் பினதாகிய உயிரைப் பேரறிவுடைய பிரமப் பொருளாகும் என்றல் பொருந்தாது. பிரமப் பொருள் எக்காலத்தும் திரிபின்றி அறிந்தாங்கு அறிந்து நிற்கும் சித்துப் பொருள். உயிரோ கருவிகளால் அறிவிக்க அறிந்து, மறந்து மறந் தறியும் இயல்பினதாகிய சித்தசித்துப்பொருள். எனவே, பிரமப் பொருளை உயிர் என்றல் பொருந்தாது. ''உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது'' என்னும் ஆசிரியரின் திரு மொழி இவ்வுண்மையினையே அறிவுறுத்துத் தெளிவுபடுத்துகின்றது.

*(7)* சமூகான்மவாதிகள், உடல் பொறி வளி முதலியனவற்றுள் ஒவ்வொன்றையும் உயிரன்று என்றது அமையும்; அவற்றுள் ஒன்று குறைந்த வழியும் அறிவு நிகழாமையானும், எல்லாம் கூடிய வழி அறிவு நிகழ்தலானும், அவையனைத் தும் கூடிய சமுதாயமே உயிராதல் கூடும் என்றுரைப்பர். ஆனால், அனைத்தும் கூடிய சமுதாயம் எனத் தகுந்த கலைமுதல் நிலம் ஈறுகிய தத்துவங்கள் யாவும், மாயையின் காரியங்களாய், வேறு வேறு பெயர்களைப் பெறுவனவாதலோடு, நிலைபெறுது அழிந்து படும் இயல்பினவுமாம். ஆதலின் அவை நிலைபேறுடைய உயிராகமாட்டா. அம் மாயா காரியத் தொகுதியானது, கண்ணுக்கு ஒளி காட்டி உதவி செய்யும் விளக்குப்போல, உயிர்க்குப் பருமை-நுண்மை-தூய்மை உடம்பு களாய்ப் பயன்படும். ஆதலால் கண்ணனது விளக்கினின்றும்வேறுயினுற்போல, உயிர் மாயா காரியத் தொகுதியின் வேறும். எனவே, மாயா காரியத் தொகுதியால் அமைக்கப்பட்டு, வியத்தக்கதொரு சூத்திரப் பாவை போல விளங்கும் உடம்பின் கண்ணே, அவற்றிற்கெல் லாம் வேருக அறிவுப் பொருளாகிய ஆன்மா என்பதொன்றுண்டு!

''கலைஆதி மண்அந்தம் காணில், அவைமாயை!
நிலையாவாம்! தீபமே போல,—அலையாமல்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடில், அதுதனுவாம்!
தான்அத்தின் வேருகும் தான்!''

என்னும் இக்கருத்தே ''மாயா இயந்திர தனு வினுள் ஆன்மா உளது'' என ஆசிரியரால் விளக்கப்பட்டது.

''பாராதி பூதம்நீ அல்லை—உன்னிப்
பார்! இந்திரியம் கரணம்நீ அல்லை!
ஆராய் உணர்வு நீ என்றுன்!—ஐயன்
அன்பாய் உரைத்தசொல் ஆனந்தம் தோழி!''

என்று போதரும் தாயுமானவப் பெருமான் திருமொழி, இம்மூன்றும் சூத்திரத்தின்கண் விளக்கப்பட்ட பொருள்களை யெல்லாம், தன் பாற் பொதிந்து உள்ளடக்கிக் கொண்டு திகழ்தல் கண்டுணர்ந்து மகிழ்ந்தின்புறற் பாலது!

## நான்காம் சூத்திரம்

ஒருபொருளின் உண்மையைப் பிரமாணம் இலக்கணம் என்னும் இரண்டு வகையானும் அறிதல் வேண்டுமாகலின், முதல் மூன்று சூத்தி ரங்களிற் பிரமாணத்தாற் பெறுவித்த பதிபாச பசுக்களை எதிர்நிரல் நிறையாக வைத்து, இனி வரும் நான்கு ஐந்து ஆறும் சூத்திரங்களில் இலக்கணத்தாற் பெறுவிக்கின்றமையின், இப் பகுதி 'இலக்கண இயல்' என்னும் பெயர் பெறும்.

''அந்தக்கரணம் அவற்றின்ஒன் றன்று; அவை
சந்தித்தது, ஆன்மாச் சகசமலத் துணராது;
அமைச்சுஅரசு ஏய்ப்பநின்று, அஞ்சுஅவத்
தைத்தே!''

என்பது சிவஞானபோதத்தின் நான்காம் சூத்தி ரம். உத்தேசத்தின்பின் இலக்கணம் கூறுதல் முறைமையாகலின், மேலைச் சூத்திரத்தின் 'ஆன்மா உளது' என்று உத்தேசமாய் எடுத்துக் கொண்ட ஆசிரியர், ஈண்டு அதன் இலக்கணம் கூறத் தலைப்படுகின்றுர். மேற் சூத்திரத்தின் ஆன்மாவின் உண்மை கூறுதற் பொருட்டு தொகுத்தோதிய அஞ்சவத்தைகள், ஈண்டு ஆன் மாவின் இலக்கணம் கூறும் முகத்தான் விரித் தோதப்படுதலான், மேலைச் சூத்திரப் பொரு ளோடு இச்சூத்திரத்தின் பொருளை ''இதுவும் அது'' என்று ஆசிரியர் மாட்டெறிந்து கூறினுர்.

ஆன்மா அந்தக் கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் நான்கனுள் ஒன்றன்று; ஆயினும், நுண்ணுணர்வு இன்மையி னுல் சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சர்களோடு கூடிநின்று அரசன் தன்தொழில் நடத்துதல் போல, சகச மலம் எனப்படும் ஆணவ மலத்

தாற் பிணிப்புண்டு கிடக்கும் ஆன்மா, தனக்குச் சூழ்ச்சித் துணையாகிய அந்தக்கரணங்களோடு கூடிநின்று, அவற்றின் துணையால் சிறப்புணர்வு நிகழப்பெறுகின்றது ; இங்ஙனம் அமைச்சரோடு கூடிய அரசனைப்போல, அந்தக்கரணங்களோடு கூடி நின்று ஆன்மா இயங்கி வருதலால், அது சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தைகளை உடையதாயிற்று — என்பது இந்நான்காம் சூத்திரத்தின் பொருள்!

ஆன்மா என்னும் சொல், வியாபகம் எனவும், சித்தசித்து எனவும் இரு பொருள்படும். அமைச்சரசு ஏய்ப்ப அந்தக்கரணங்களோடு கூடி நிற்றலால், ஐந்தவத்தைப்படுதல் ஆன்மாவிற்கு இலக்கணம் என்பதனை ஆசிரியர் இந்நான்காம் சூத்திரத்தாற் பெறுவித்தார்.

அந்தக்கரணங்கள் ஒவ்வொன்றனையும், ஒவ்வோர் அமையத்து ஆன்மா எனக் கூறுதல் கொண்டும், ''மனமும் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும் மருவி ஆன்மாவே என்ன வரும்'' என்பது கொண்டும், அந்தக்கரணங்களையே சித்தாகிய ஆன்மா எனச் சிலர் கருதி மயங்குவர். அந்தக்கரணான்மவாதிகள் எனப்படும் அவர்களின் பிழைபட்ட அக்கருத்தினை ''அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்'' என்னும் ஏதுவால் ஆசிரியர் மறுத்துரைத்துத் தெளிவுபடுத்துகின்றார். பிரகாசம் அப்பிரகாசம் என்பன, அறிவு அறிவின்மை என்னும் பொருளில் வந்தன. சித்தம் சிந்தித்தறியும், யான் சிந்தித்தேன் என்று அறியமாட்டாது; மனம் பொருள்களைச் சங்கற்ப விகற்பம் செய்தறியும், யான் சங்கற்ப விகற்பம் செய்தேன் என்று அறியாது; அகங்காரம் ஒன்றை இன்னதெனத் துணிவேன் யான் என்று ஒருப்பட்டெழுந்து அறியும், யான் ஒருப்பட்டெழுந்தேன் என்று உணராது; புத்தி இன்னது இது எனப் பொருள்களை நிச்சயித்தறியும், யான் நிச்சயித்தேன் என்று தெளியாது. ஆகலான், அந்தக் கரணங்களோடு கூடி யான் சிந்தித்தேன், பற்றினேன், எழுந்திருந்தேன், நிச்சயித்தேன் என்று அறிந்தும் ; இது சுகம், இது துக்கம், இது மோகம் என்று அறிந்தும்; யான் சுகித்தேன், துக்கித்தேன், மோகித்தேன் என்று அறிந்தும், பிறவற்றை நோக்கியும் தன்னை நோக்கியும் அறிவுடைய சித்துப் பொருளாக நிற்கும் ஆன்மா, தம்மை நோக்கிச் சித்துப் பொருளாகாத அந்தக்கரணங்களின் வேறுபட்டது எனவே துணியப்படும் என்பது, மேலை ஏது மொழியின் கருத்தாகும். அரசனுக்கு அணுக்கராதற் சிறப்புப் பற்றி அமைச்சரை அரசர் என்று ஒரோவழி உபசரித்துக் கூறப்படுமாறு போல, புறக் கருவிகளை நோக்கி ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்கும் சிறப்புப் பற்றி, ''மனமும் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும் மருவி ஆன்மா என்ன'' உபசரித்துக் கூறப்பட்டன. இவ்வுண்மையறியாது அந்தக் கரணங்களையே ஆன்மா என மயங்கற்க என்பது.

ஐம்புலன்கள் மனம் முதலிய அந்தக் கரணங்களின் சார்பால் பொருள்களை உணரும். அந்தக்கரணங்களால் உயிரின் சார்பால் அறிவு நிலை அடையும். ஐம்பொறிகளின் வாயிலாக அறிவது வாயிற்காட்சி. பின் மனத்தில் தோன்றுவது மானதக் காட்சி. அதன்பின் புத்தியில் தோன்றுவது தன் வேதனைக் காட்சி. இவை யாவும் கடலிடை எழுந்து கரைசாரும் திரைபோல ஆன்மாவின் மாட்டுப் பரம்பரையின் வந்து தோன்றும். வாயிற் காட்சியின் கண்ணும், ஒரு பெற்றித்தாதலின்றிச் சித்தமாய்ச் சிந்தித்தும், மனமாய்ப் பந்தித்தும், அகங்காரமாய்த் தெளிவு பிறவாது எழுந்தும், புத்தியாய்த் தெளிந்தும் வெவ்வேறாகவே உணர்தலான், அவ்வாறு உணரும் புருடனாகிய ஆன்மா, ஞாயிறு முதலியவற்றோடு கூடிநின்று நாழிகை நாள் பக்கம் திங்கள் யாண்டு முதலியனவாய்ப் பாகுபாடு செய்யப்படும் கால தத்துவம், அஞ்ஞாயிறு முதலியவற்றின் வேறாயினாற் போல, அந்தக் கரணங்களினின்றும் வேறாவதேயாம். இங்ஙனம்வேறு வேறாகிய அந்தக்கரணங்களையும் ஆன்மாவையும், வைகரி முதலிய வாக்குகள் ஐந்தும், அகாரம் முதலிய பஞ்சகலை வடிவினவாய், நின்று, ஒரோவொன்று ஒரோவொரு கருவிகளைச் செலுத்தி உடன் நிற்கும். மானதக் காட்சியின் நிகழும் சவிகற்ப உணர்விற்கு ஏதுவாய், அகரம் அகங்காரத்தையும், உகரம் புத்தியினையும், மகரம் மனத்தினையும், விந்து சித்தத்தினையும், நாதம் உயிரினையும் உடனின்று செலுத்தி நிற்கும் என்பது, ஈண்டு அறியற்பாலது.

அகார உகாரம், அகங்காரம் புத்தி;
மகாரம் மனம்; சித்தம் விந்து;—பகாது இவற்றை,
நாதம் உளவடிவாம்; நாடிற் பிரணவம், ஆம்;
போதம் கடற்றிரையே போன்று!

இங்ஙனம் அந்தக்கரணங்களை அதிட்டித்து நின்று, கணந்தோறும் நினைப்பும் மறப்பும் ஆகிய சகல கேவலங்கள் கடற்றிரையே போன்று மாறி மாறித் தோன்றுமாறு செய்து வரும் அக்கரங்கள் தாமும் சடமாகலின், அவற்றை அதிட்டித்து நின்று இயக்கும் அதிதெய்வங்கள் உள என்பதும் ஈண்டு உணரற்பாலதாகும்.

''எண்நிலவு ஓங்காரத்து, ஈசர், சதாசிவமாம்
நண்ணிய விந்துவொடு நாதத்துக்;—கண்ணிற்
பகர்அயன், மா லோடு, பரமன் அதிதெய்வம்
அகர, உக ரம், மகரத் தாம்!''

என்னும் ஆசிரியர் திருமொழியால், மானதக் காட்சியின்கண் நிலவிய பிரணவத்தின்கண் உள்ள நாதத்திற்குச் சதாசிவரும், விந்துவிற்கு மகேசுவரரும், மகரத்திற்கு உருத்திரரும், உகரத்திற்குத் திருமாலும், அகரத்திற்குப் பிரமனும் அதிதெய்வங்களாக அதிட்டித்து நின்று இயக்குவர் என்பது பெறப்படும். இதனாலேயே கடலின்கண் புதிது புதிதாய்த் திரைகள் தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போல, உயிர்கள்பாற் கணந்தொறும் உணர்வுகள் உதித்தும் ஒடுங்கியும் போதருகின்றன. கடற்றிரையுவமை, உணர்வுகள் பரம்பரையாய் வருதற்கும், புதிது புதிதாய் வருதற்கும் முறையே இருமுறை காட்டப்பெற்றது; கூறியது கூறல் என்று கருதற்க.

இனி ஆன்மா, அந்தக்கரணங்களின் ஒன்றன்றாயின், அவற்றோடு சந்தித்து நிற்றற்கு ஏது வென்னை என ஐயம் நிகழ்தல் இயல்பு. ஆன்மாவானது இறைவனைப் போன்ற சேதனப் பொருளாய் அந்தக்கரணங்கள் முதலியவற்றின் வேறாயதெனினும், நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினிற் களிம்பும் போல வேறு காரண மின்றி, மூலமலம் என்பதொன்று தன்னொடு கலந்து ஞான திரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலின், தன்னியல்பாற் பொருள்களை உணரு மாறு இன்றி, அந்தக்கரணம் முதலிய கருவி களைக் கூடி நின்று உணர வேண்டுவதாயிற்று. அனாதியே மலத்தினின்று நீங்குதல் முதல் வனின் இயல்பாதல் போல, அனாதியே மலத் தைப்பற்றி நிற்றல் உயிரின் இயல்பு என்பது, சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்ததொன்று. ஆணவ மலமானது உயிர்களை அனாதியே பற்றி நிற்றலை ''அதுவதுவாய்வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றும் காட்டம்போல், தன்னை மலம் அன்று அணைதல் தான்'' என்று ஆசிரியர் விளக்குகின்றார். விறகினுள் நெருப்பு மறைந்து விரவி நிற்றல் போல, உயிர்களின் பால் ஆணவ மலம் மறைந்து இரண்டற விரவி நிற்கின்றது என்பது கருத்து. எனவே, இதனால் ''மலத்துளதாம்'' என முதற் சூத்திரத்துட் சுட்டிய மூலமலத்திற்கு, ஈண்டு இலக்கணம் கூறியவாறாயிற்று.

''ஒன்றதாய், அனேக சத்தி
உடையதாய், உடனாய், ஆதி
அன்றதாய், ஆன்மா வின்றன்
அறிவோடு தொழிலை ஆர்த்து
நின்று,போத் திருத்து வத்தை
நிகழ்த்திச், செம்பினிற் களிம்பேய்ந்து,
என்றும்அஞ் ஞானம் காட்டும்
ஆணவம் இயைந்து நின்றே!

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுளால் ஆணவமலம் இனையதென உணரலாம். ஆன்மாக்களுடன் அனாதியே சகசமாய்க் கலந்து நின்று அவை கருவிகளோடு கூடாத கேவல நிலையில் அவற்றிற்கு அறியாமையை விளைத்து நிற்றல் ஆணவ மலத்திற்குத் தன்னியல்பு (சொரூப லட்சணம்); ஆன்மாக்கள் கருவிக ளோடு கூடிய சகல நிலையில் விபரீத உணர்வை விளைவித்து ஐந்தவத்தைகளை அடைவித்தல் அதற்குப் பொதுவியல்பு (தடத்த லட்சணம்). எனவே, ஆணவ மலத்தின் இரு வகை இலக் கணமும் ஈண்டுக் கூறப்பட்டன.

இனி ஆன்மாக்களின் அறிவைமறைத்தற்கு மாயா மலமாகிய ஆகந்துக (இடையில் வரும்) மலமே, ஞான திரோதமாதல் அமையும், வேறுமோர் ஆணவம் என்னும் மூலமும் உண் டென்றல் எற்றுக்கு? எனச் சிலர் வினவுவர். ''மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணாதேல் ஆயாதாம் ஒன்றை'' ஆதலின், பொருள்களை அறியும் வண்ணம் உயிர்கட்கு அறிவை விளக்கு தல் மாயையின் செய்தி ; அவ்வறிவைத் தடை செய்து கொண்டு நிற்றல் ஆணவத்தின் செய்தி. இவ்வாற்றால் ஆணவ மலமும், மாயா மலமும் தம்முள் இருளும் ஒளியும்போல இகலி நிற்பனவாம். உயிரின் அறிவைச் சுட்டுப் பொருள்களில் அழுந்தச் செய்து, அவற்றால் நில்லாதனவற்றை நிலையின என்றுணரச் செய் தல்பற்றி, ''மாயை மயக்கமும் செய்யுமன்றே'' எனக் கூறப்பெற்றதாயினும், அஃது ஆணவ மலம்போல முற்றிலும் அறியாமையை விளை வித்து நிற்றல் இல்லை என்பது கடைப்பிடிக்க. எனவே, உயிர்களுக்கு அறிவை விளக்கும் கருவிகளாய் இடையே வந்து சேர்ந்துதவும் மாயாமலத்தின் வேறாக, அனாதியே உயிர்களைப் பற்றி நின்று அறியாமையை விளைத்துவரும் மலம் வேறுண்டு என்பது தெளிவு.

இனி, இருளின் அகப்பட்ட கண், விளக் கோடு கூடியவழிப் பொருள்களைக் காண்டலே யன்றி, வேறு வேறு அவத்தைகளைப் படுமாறு இல்லை; அதுபோல மலத்தில் அகப்பட்ட உயிர், கருவிகளோடு சந்தித்தவழி ஒரு தன்மையாய் அறிதலே அமைவுடைத்து; அவ்வாறின்றி ஐம் புலன் அறிந்தும், ஒடுக்கம் அறிந்தும், உண்டி வினை இன்றிக் கிடந்தும், உணர்த்த உணர்ந் தும், இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப்படுவது எற்றுக்கு? என்னும் வினா நிகழ்த்தப்படும். அமைச்சரோடு கூடிநின்று தன் காரியம் செய் யும் அரசன், வேறு வேறு அவத்தைகளை யுடைய னாதல் போல, அந்தக் கரணங்களோடு கூடிய ஆன்மாவும் அஞ்சவத்தை யுறுவதாயிற்று. இதனையே,

''படைகொடு பவனி போதும்
பார்மன்னன் புகும்போது, இல்லிற்
கடைதொறும் விட்டு விட்டுக்,
காவலும்இட்டுப், பின்னர்
அடைதரும் தனியே அந்தப்
புரத்தினில்; அதுபோல், ஆன்மா
உடலினின் அஞ்ச வத்தை
உறும், உயிர் காவல் ஆக!''

எனப் போதரும் சிவஞான சித்தியார் செய்யுள் அழகுற விளக்குதல் காணலாம். காணவே, கருவிகளோடு கூடி நின்று ஐந்தவத்தையுறுதல் உயிரின் இலக்கணம் என்றுணர்க. ஆன்மா வியாபகமாயினும் அருவமாகிய தத்துவங்கள் செயல்படும் முறையின் வேறுபாடுபற்றி அவத் தையுறுதல் சாலும் என்று வற்புறுத்துதற்கு, ''அதுதான் மல சொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான்'' என ஆசிரியர் ஏதுக் கூறி விளக்கியருளினார். அவத்தை நிலைதோறும் கூடும் வெவ்வேறு கருவிகளினும் ஆன்மா முழுவ தும் வியாபித்து நிற்றலின், அவத்தை நிலைக ளால் ஆன்மாவின் வியாபகத் தன்மைக்கு இழுக் கில்லை என்பது, இதனால் தெருட்டப்பட்டது.

(1) ஐந்தவத்தைகளாவன: சாக்கிரம் சொப் பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்பன. இவற்றை நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படக்கம் எனவும் கூறுப. ஆன்மா ஐந் தவத்தை யுறுதற்குக் காரணம் தத்துவங்களின் தொழிற்பாடேயாம். அத்தொழிற்பாட்டின் கண், கருவிகள் எல்லாவற்றோடும் கூடிய உயிரின் பால், தூலம் சூக்குமம் என்னும் இரு வகைப் பூதங்களும், அவற்றின் கூறாகிய தாத்துவிகங் களும், தமது சத்திமடங்கித் தொழிற்படாது வினைக்கீடாக நிற்கும் அளவில், பொறிகளின் தொழிற்பாடு மெத்தென நிகழும்; அதுபோது கண்டும் காணாது, கேட்டும் கேளாது, தீண்டியும் தீண்டாது, சுவைத்தும் சுவையாது, முரன்றும் முரலாது நிற்கும் நிலை சாக்கிரம். இவ்வவத்தை யில் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும், சத்தப் பரிச ரூப ரச கந்தம் என்னும் தன்மாத்திரை ஐந்தும், வசனம் கமனம் தானம்

விசர்க்கம் ஆனந்தம் என்னும் வசனாதி ஐந்தும், அந்தக்கரணம் நான்கும், புருடனும், வாயுக்கள் பத்தும் ஆகக் கருவிகள் முப்பத்தைந்தும் தொழிற்படும். இதற்குத் தானம் புருவநடு.

(2) இனிப், பொறிகளும் தமது சத்திமடங்கி, அவைமடங்கவே அவற்றின் வழியவாகிய வாக்காதிகளும் தம்து சத்திமடங்கி, அவ்விருவகைப் பொறிகளும் தொழிற்பாடு இன்றி ஆண்டு நின்றொழியும் அவத்தையின், ஏனை அந்தக்கரணம் முதலியன தொழிற்படினும் புறப்பொருள் விடயமாகாமையின், அகத்தே சூக்கும தேகத்தோடு நின்று, ஆண்டைக்குரிய இருவினைப் பயன்களை நுகர்ந்து நிற்கும் அவத்தை சொப்பனம். இதற்குத் தானம் கண்டம். இதில் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் தொழிற்படாமையின், இங்குத் தொழிற்படுவன ஏனைய இருபத்தைந்துமேயாம்.

(3) இனி, அந்தக் கரணங்களும் தமது சத்தி மடங்கிச் செயலற்ற வழி, அவை விடயத்திற் கேதுவாகிய வசனாதி சத்தாதி விடயங்களும், பிராணன் ஒழித்து ஒழிந்த வாயுக்களும், அவற்றோடு செயலற்று நின்றொழிய, மனத்தின் விருத்தியாகிய சித்தமும், ஆண்டு நிகழும் அவத்தைக் குரிய ஆற்றல் மாத்திரைக்கும், உடம்பிற்குக் காவலாதல் மாத்திரைக்கும் ஏதுவாய், அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணவாயுவும், அவற்றோடு கூடி விடயிப்பதாகிய புருடனுமாகிய மூன்று கருவிகளும் கூடித் தொழிற்படும் அவத்தையில், நிச்சயித்தற் கேதுவாகிய புத்தி தத்துவம் முதலாயின தொழிற்படாமையின் நனவின்கண் அறிய வராததாய், ஒன்றனைத் தூக்கிச் சிந்தித்து நிற்கும் அவத்தை சுழுத்தி, இதற்குத் தானம் இதயம்.

(4) சித்தமும் தனது சத்தி மடங்கிச் செயலற்றொழியும் அவத்தையின், ஆங்காரத்தான் இயக்கப்படும் பிராணவாயுவும், புருடனும் என்னும் இரண்டு கருவியும்கூடி, உடம்பிற்குக் காவலாய தன்னையே விடயிக்கும் அவத்தை துரியம். இதற்குத் தானம் உந்தி.

(5) ஆங்காரம் பிராணவாயுவை இயக்குதற்கண் உளதாகிய சத்தி மடங்கிச் செயலற்றொழிதலின், பிராணவாயுவும் செயலற்றொழியும் அவத்தையிற் பஞ்சகஞ்சுகன் ஆகிய புருடன் ஒன்றை மட்டும், தன்னின் நீங்காத மூலப்பகுதியோடு கூடி, அவிச்சை மாத்திரையை விடயித்து நிற்கும் அவத்தை துரியாதீதம். இதற்குத் தானம் மூலாதாரம்.

''சாக்கிரம் முப்பந் தைந்து
நுதலினில்; கனவு தன்னில்
ஆக்கிய இருபத் தைந்து
களத்தினில்; சுழுனை மூன்று
நீக்கிய இதயம் தன்னில்;
துரியத்தில் இரண்டு நாபி;
நோக்கிய துரியா தீதம்
நுவலின், மூலத்தின் ஒன்றே!''

சாக்கிர (நனவு) நிலையில் ஆன்மா புருவ நடுவின்கண் மேற்கூறிய முப்பத்தைந்து கருவிகளுடன் கூடி நிற்கும். அங்ஙனம் நிற்கும் ஆன்மா, கன்மேந்திரியம் ஐந்தும் ஞானேந்திரியம் ஐந்தும் ஆகிய இந்திரியங்கள் பத்தும் நீங்க, எஞ்சி நின்ற இருபத்தைந்து கருவிகளுடன் சொப்பன (கனவு) நிலையில் கீழிறங்கிக் கழுத்திற்குப் போதரும்; பின்பு அங்கு நின்றிழிந்து சித்தம் பிராணவாயு புருடன் என்னும் மூன்று கருவிகளுடன், சுழுத்தி (உறக்க) நிலையில் இதயத்தினை அடையும்; பின்னர் அங்கு நின்றும் பெயர்ந்து பிராணவாயுவும் புருடனுமாகிய இரண்டு கருவிகளுடன் துரிய (பேருறக்க) நிலையில் உந்தியைச் சாரும்; அதன் பின்னர் மேலும் அங்கிருந்து பெயர்ந்து துரியாதீத (உயிர்ப்படக்க) நிலையில், தான்மட்டுமே தனித்து நின்று மூலப் பகுதியோடு கூடி அறியாமையைப் பற்றி நுகர்ந்திருக்கும். இவ்வாறு ஆன்மா புருவ நடுவினின்று கீழ் இறங்கிப் படி முறையே கருவிகளைப் பிரிந்து பிரிந்து சென்று மூலாதாரத்தை அடைவது கீழால் அவத்தை எனவும், மூலாதாரத்தினின்று மீண்டு முன்னர்ப் போந்த முறையே ஆங்காங்குக் கருவிகளோடு கூடிக் கூடிப் புருவ நடுவைச் சேர்வது மேலால் அவத்தை எனவும் கூறப்படும். கீழாலவத்தை உறக்கத்துக்குச் செல்லும் நிலையும், மேலால் அவத்தை உறக்கத்தினின்று எழும் நிலையுமாம். கீழ்நோக்கிச் செல்லுங்காலத்தும், மேல்நோக்கிச் செல்லுங் காலத்தும் இலாடம் என்னும் புருவ நடுவின்கண் சாக்கிராவத்தை நிகழுமாயினும், மேலாலவத்தைச் சாக்கிரம் பொருள்களை யுணர்த்துமேயன்றிக் கீழாலவத்தைச் சாக்கிரம் பொருள்களை உணர்த்தாது. ஆதலின் கீழாலவத்தை கீழே நூக்கிப் பிறவிக்குக் காரணமாம் எனவும், மேலாலவத்தை, 'பெருக மேல்நோக்கித் தீய பிறப்பறுத்திடும்' எனவும் கூறுவர்.

சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் இவ்வவத்தை ஐந்தும் காரியாவத்தை எனப்படும். கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூவகை நிலைகளும் உயிர்க்குக் காரணவத்தை எனப்படும். உயிர் ஆணவ மலத்தோடு கூடி நிற்பது கேவல நிலை ; மாயா கருவிகளோடு கூடி நிற்பது சகல நிலை ; மலத்தின் நீங்கி இறைவனோடு கலந்து நிற்பது சுத்த நிலை. கேவல நிலையில் மல மறைப்பால் உயிர்கள் எதனையும் உணரமாட்டா; சகல நிலையில் உயிர்கள் கருவிகளின் துணையால் உலகினை உணரும்; சுத்த நிலையில் உயிர்கள் இறைவனொடு கலந்து இறையின்பம் நுகரும். கேவலம் சகலம் சுத்தம் என்னும் இம்மூன்றினும் தனித்தனியே சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகளும் நிகழும். நிகழின் அவற்றைக் கேவல சாக்கிரம், சகல சாக்கிரம், நின்மல சாக்கிரம் என்று முறையே கூறுவர். இங்ஙனம் ஆன்மா பற்பல அவத்தைகளையும் அடைதல், ஆணவ கன்மம் மாயை என்னும் மும்மலங்களினாலேயாம். மும்மலங்களினின்றும் அறவே நீங்கிய வழிப் பிறந்திறத்தலும் ஐந்தவத்தைப்படுதலும் இல்லையாய்ச் சிவத்தோடு இரண்டறக் கலந்தின் புற்று நிற்கும்.

''கேவல சகல சுத்தம்
என்றுமூன் றவத்தை, ஆன்மா
மேவுவன்; கேவ லம், தன் னுண்மை;
மெய் பொறிகள் எல்லாம்
காவலன் கொடுத்த போது
சகலனும்; மலங்கள் எல்லாம்
ஓவின போது சுத்தம்
உடையன், உற்பவம் துடைத்தே!''

# பராங்குச நாயகி

[திரு. கே. பட்சிராஜன், B.A., BL., நெல்லை]

உலகம் யாவையும் தாமுளவாக்கி, நிலை பெறுத்து, நீக்கி, அலகிலா விளையாட்டை இடையறுது நிகழ்த்துகிருன் இறைவன் என்பது ஸ்ரீ வைஷ்ணவ அறிஞர்கள் தேர்ந்த உண்மை. படைக்கப்பட்ட சேதநர்களுக்கு (ஆன்மாக்களுக்கு) வாழ்க்கையின் குறிக்கோளையும் அதைக் கிட்டும் வகையில் நல்லதும், தீயதும் ஆய வற்றைப் பகுத்து உணர்தற்கு மறைகளை சுருதி அவ்வழியொழுகி அவ்வான்மாக்கள் தன்னைக் கிட்டுகிறதா என்று ஆட்பார்த்து உழல்கின்றுன் இறைவன். குறிக்கோள் இறைவனை அறிந்து தன்னியல்பையும் உணர்ந்து ஆன்மாக்கள் அவன் திருவடியில் கிட்டி அவனுக்கு வழுவிலா அடிமை செய்ய வேண்டும் என்பதே. இதனை ''உற்றேன் உகந்து பணி செய்து உன்பாதம் பெற்றேன் ஈதே இன்னும் வேண்டுவது'' என்றே பிரார்த்தித்து ''அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்து'' அவன் திருவுள்ளம் உகக்க செய்யும் கைங்கர்யமே உண்மையான ஆன்ம வாழ்வு என்பது ஸ்ரீ வைஷ்ணவ லட்சியம். இதனையே (அவன் தாளிணைக்கீழ் வாழ்ச்சி) என்று குறித்தார் நம்மாழ்வார்.

ஆன்மா என்றுமே சுதந்திரம் அன்று. அது இறைவனுக்கு அடிமையே. ஆன்மாவின் இயல்பே அதுதான். எங்கும் பரந்துள்ளவன் இறைவன் என்பதைக் குறிக்க வந்த நம்மாழ்வார் ஆன்மாவுக்குள்ளும் அவன் பரந்துள்ளான் என்பதை அப்படியே கூறுது ''அடியேனுள்ளான்'' என்று அவ்வான்மாவின் இயல்பை வைத்தே குறித்தார்.

இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள உறவு இறைவனுலும் ஆன்மாவாலும் ஒழிக்க முடியாத ஒன்று. இதனையே ஆண்டாள் ''உந்தன்னேடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது'' என்ருள். 'எனக்கு' என்னுமலும் 'உனக்கு' என்னுமலும் 'நமக்கு' என்று அவள் அருளியதன் நயம் உணர்ந்து மகிழத்தக்கது.

''இந்த ஒழியா உறவு'' நமக்கும் அவனுக்கும் உள்ள சம்பந்தம் (தொடர்பு) அனைத்தையும் உணர்த்தும். இந்த சம்பந்தம் ஒன்பது வகைப்படும் என்பர். அவற்றுளெல்லாம் தலையாயது நாயக நாயகி சம்பந்தம். இறைவனை நாயகனுகவும், ஆன்மாவை நாயகியாகவும், உணர்ந்து அனுபவிக்கலாம். முக்தியடையும் ஆன்மா அவன் திருவடியைக் கிட்டியபோது ஆன்மா இறைவனை அனுபவிக்கிறது. இறைவன் ஆன்மாவை அனுபவிக்கிருன். ஆன்மா அந்த நிலையில் ''அஹமன்னம் அஹமன்னம் அஹமன்னம் அஹமன்னுதோ அஹமன்னுதோ அஹமன்னுதக'' : நான் உண்கிறேன் ; நான் உண்ணப்படுகிறேன்; என்று கூறுவதாக உபநிடதம் கூறும். இருவரும் ஒரே நேரத்தில் ஒத்த இன்பம் அனுபவிப்பது நாயக நாயகி நிலையில் தானே.

இத்தகைய நாயகி நிலை ஆன்மாவுக்கு இறைவன்பால் செலுத்தும் பக்தி, பிரேம பக்தியாகும்போது ஏற்படுகிறது. இந்நிலையில் ஆன்மா பெண் தன்மை அடைகிறது. இந்தப் பெண் தன்மையில் மூன்று நிலைகள் ஏற்படுகின்றன. அவையாவன : தாய், தோழி, தலைவி. பெண் தன்மையிலே பதற்றம் ஏற்படும் பொழுது தாய் நிலையும், உணர்த்தல் நிலை ஏற்படும்பொழுது தோழி நிலையும், துணிவு ஏற்படும்பொழுது தலைவி நிலையும் உண்டாகின்றது என்பர் ஆசாரியர்கள். எனவே, ஆழ்வார் பாசுரங்களில் தாய் வார்த்தையாகவும், தோழி வார்த்தையாகவும், தலைவி பாசுரங்களாகவும் பாசுரங்கள் வருவதை நாம் பார்க்கிறோம். இம்முறையில் ''சிகரமணி நெடு மாடங்கள் மீது மதன்திருப்பேரையில் வீற்றிருந்த மகரநெடுங் குழைக்காதன் மாயன்'' திறத்திலே நம்மாழ்வார் என்ற நாயகி அடைகின்ற நிலை துணிவு என்ற பகுதியின்பாற்படும். இனி அந்த நிலை அந்நாயகிக்கு வந்த வரலாற்றையும், அதன் காரணமாக அவள் பேசி அருளியவற்றையும் அனுபவிப்போம்.

இத்திருப்பதிப் பதிகமான ''வெள்ளைச் சுரி சங்கு''க்கு முன்னைய பதிகம் கங்குலும் பகலுமென்பது. அப்பதிகம் தாய் அவள் நிலைமையைக் கண்டு பதறிப் பேசுவதாக வருவது. ''இட்டகால்இட்டகையளாய் இருக்கும், எழுந்துளாய் மயங்கும், கைகூப்பும், கட்டமே காதலென்றர்ச்சிக்கும்'' என்று சிந்திக்கும், திகைக்கும், தேறும் திருவரங்கத்துள்ளாய்'' என்று வந்திக்கும் ஆங்கே மழைக் கண்ணீர் மல்க வந்திட்டாய் என்றென்றே மயங்கும்'', என்று இப்படிப் பலவாருகத் தன் மகள் பட்ட அவத்தைகளையெல்லாம் கூறிக் கதறி, ''பைகொள் பாம்பணையாய் இவள் திறத்தருளாய்பாவியேன் செயற்பாலதுவே'' என்றும், ''என்செய்கேன் என் திருமகட்கே'' என் தெளிகிலேன்—முடிவிலள் தனக்கே'' என்றும் பதறிப் பிதற்றி நின்ற தாய், பயங்கிக் கிடந்த மகள் தன் உருவெளிப் பாட்டிலே இறைவனைக் கண்டு அவனை அடைந்தாள் போல் மயக்கம் தெளிந்து சற்றுத் தேறினமை கண்டு,''அடிஅடையாதாள்போல்'' தவித்த தன் மகள் ''அணுகி அடைந்தனள் முகில்வண்ணன் அடியே'' என்று முடித்ததாகக்

காண்கிறோம். ''அவள் அடைந்தனள்'' என்பது எப்படி என்பதை அப்பதிகத்திலே நாம் காண வில்லை. அவ்வுரு வெளிப்பாட்டிலே அம்மகள் எப்படிக் கண்டாள் என்பதை இத்திருப்பதிகத் தின் தொடக்கத்தில் நாம் காண்கிறோம்.

மயங்கிக் கிடந்த அம்மகள் மனத்திலே இறைவன் தோன்றுகிறான், எப்படி? தன்னந் தனியனாக வரவில்லை. பிற ஆண்மகன் போலே இருகையனாக வரவில்லை. கையிலே திருவாழி யும் சங்குமாக சதுர்புஜங்களோடு தோன்று கிறான். தன் திருவடிகள் நிலந்தோயவரவில்லை. கருடாரூடனாகத் தோன்றுகிறான். தோன்றி வந்து நிற்கிறானா? இல்லை, அவ் வேகப் பறவை யின்மீது சாரி வருகிறான் அவள் மனத்திலே. மகள் கூவுகிறாள் தாயை ''என்னைக் குறை கூறி னீர்களே'' ''போடி பைத்தியம், பகவானாவது உன்னிடம் வருவதாவது?'' என்றெல்லாம் கேலி செய்தீர்களே, இங்கே வாருங்கள், வந்து பாருங்கள்!

''வெள்ளைச் சுரி சங்கோடாழியேந்தி
தாமரைக் கண்ணனென் நெஞ்சினூடே
புள்ளைக் கடாநின்ற வாற்றைக் காணீர்''

என்று கூப்பிடுகிறாள். தாயர்கள் வருவதற்குள் அவ்விறைவனை அனுபவித்து, ஆகா அவன் அழகை ''என் சொல்லிச் சொல்லுகேன் அன்னை மீர்காள்'' என்று மகிழ்ச்சியோடு ஆரவாரிக் கிறாள்.

தாயர் வருகின்றனர். இவள் ஆரவாரம் கேட்டுத்தோழியரும் வருகின்றனர். அச்சேரியி லுள்ள அயலாரும் வருகின்றனர். ஆனால் இவள் அந்த அனுபவத்திலே திளைத்துக் கண்மூடி நிற் கையிலேயே அந்த ''வேகப் பறவையின் பாகன்'' அவள் நெஞ்சைவிட்டு மறைந்து விடுகிறான். விழிக்கிறாள்; தலைவனைக் காணவில்லை. இப்போது இங்கிருந்தவன் அதற்குள் எங்கே போய்விடு வான் என்று ஆய்கின்றது அவள் மனம். அரு கிலே உள்ள திருப்பேரை ஊர் நினைவு வரு கிறது. தான் அவனை நினைத்துப் புலம்பும் பொழுது ''நின் திருஎயிற்றால் இடந்து நீ கொண்ட நிலமகள் கேள்வனே'' என்று புலம் பியது நினைவுக்கு வருகின்றது. அந்த நிலமகள் தவம் செய்து பேறு பெற்ற தலமல்லவா திருப் பேரை (அத்திருப்பதியின் தலவரலாற்றைக் கொஞ்சம் நோக்க வேண்டும். எம்பெருமா னுக்குத் திடீரென்று தன் திருமேனி போல கருப்பில் அழகியான பூமிப்பிராட்டி பால் விசேட கடாட்சம் ஏற்பட்டதாம். அதனால் திருமகளைக் கொஞ்சம் அசட்டை செய்தானும். திருமகள் துர்வாச முனிவரை வேண்ட, அவர் பூமிபிராட்டி அருகில் சென்றபோது தன் கருமை அழகில் செருக்குற்ற அவள், அவரை உடன் கவனியாது அசட்டை செய்ய, ''எவ் வழகு காரணமாக நீ செருக்குற்றாயோ அவ் வழகு இல்லாதொழிக'' என்று அவர் சாபமிட, அவனிமாது தன் நிறமிழந்து பின் சாப விமோச னமாக இத் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் நிகரில் முகில்வண்ணன் சந்நிதியில் பேரை என்னும் திருநாமம் பூண்டு, தவம் கிடந்து, மீண்டும் தன் நிறம் பெற்றாள் என்பதல்லவா தலவரலாறு). முந்திய பதிகத்தில் ''அடைந் தனள் முகில் வண்ணன் அடியே'' என்றல்லவா முடிந்தது. அம்முகில் வண்ணன் உறையும் ஊர் அருகேயுள்ள திருப்பேரைதானே. அங் கிருந்தவன் என் புலம்பல் கேட்டு வந்து முகம் காட்டினான். காட்டி மீண்டும் அங்கேதான் சென்றிருப்பான். அவன் வந்து சென்றமை ''என்னிடத்திற்கு நீ வருக' என்று சொல்லிப் போந்ததாக ஏன் இருக்கக் கூடாது என்று எண்ணுகிறாள் தலைவி. அந்த ஊருக்கு முன்னே சென்றும் இருக்கிறாள். அங்கே எப்பொழுதும் தலவகார, சாம வேதியர் நூற்றெண்மர் வேத ஒலியும் கோயில் திருவிழா ஒலியும் இளம் சிறார்கள் தங்கள் பிஞ்சுக் கைகளால் கோயில் அமைத்து ஏதோ ஒன்றைப் பிடித்து இறைவ னென்று பெயரிட்டுத் தம் மழலைச் சொல்லால் அவன் புகழ் பாடும் விளையாட்டொலியும் நிரந் தரமாகக் கேட்கும் ஊரல்லவா! அங்குதான் அவன் சென்றிருக்க வேண்டும். அங்கே வருக என்றுதான் அவன் குறித்துப் போயிருக்க வேண் டும். எனவே, நான் தென்திருப்பேரைக்குச் செல்வேன் என்று கூறுகிறாள். வந்த தாய்மார் தோழியரிடம் ''அங்குதான் இருப்பானென்று எப்படி நீ சொல்லுகின்றாய்?'' என்று வந்தவர் வினவ, ஆம் அங்குதான் சுகவெள்ளம் விசும் பிறந்து வெள்ளமாகப் பரக்க, அவன் நிலமக ளோடு அங்குதான் இருப்பான். நான் அங்கே போகத்தான் போகிறேன்'' என்கிறாள் தலைவி.

''வெள்ளச் சுகமவள் வீற்றிருந்த
வேதவொலியும் விழாவொலியும்
பிள்ளைக்குழாம் விளையாட்டொலியும் அறாத்
திருப்பேரையிற் சேர்வன் நானே''

இப்படி அவள் கூறியதும், தோழிகளும் தாய்மார்களும் ''என்னடி இது?'' இப்படி உன் நெஞ்சை ஓடவிட்டுப் புலம்புகிறாயே? ஓர் அடக்கம் வேண்டாமா? உன் மனதைக் கட்டுப் படுத்திக் கொள்'' என்று அறிவுரை கூறுகிறார் கள். தலைவியோ, ''அம்மா, நான் என்ன செய்வேன். என் நெஞ்சு என் கட்டுப்பாட்டுக் குள்ளா இப்பொழுது இருக்கிறது? அதை என்னால் அடக்க முடியவில்லை. அது இப்பொழுது என்ன செய்கிறது தெரியுமோ, அந்த நீலவண்ண னுடைய சிவந்த, கொவ்வைக் கனி போன்ற அதரங்களின் அழகிலே ஈடுபட்டு அதையே நோக்கிக் கொண்டு நிற்கிறது. அவன் வரும் போது முதலிலே என் கண்ணில்பட்டது அவ னுடைய வெள்ளைச் சுரி சங்குதானே. அது அவன் அதரங்களின் சுவையை நன்கு அறிந்த தல்லவா? அந்தச் சங்கையே நோக்கி இரகசிய மாக அவள் அதரங்களின் சுவை 'கற்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ என்று அம் மாயன் செவ்வாயின் குணம் வினவி நிற்கின் றதோ, என்னமோ?''

தோழி கேட்டாள் : ''அடி என்னதான் இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு ஒரு நாணும் நிறையும் இயல்பல்லவா? இப்படி நெஞ்சு என் கைக்குள் இல்லை என்று பேசுகிறாயே'' என்று கேட்க, தலைவி ''ஆமாம் நாணையும் நிறையை யும் மதித்து நடக்க வேண்டியது நெஞ்சுதானே. அதுதான் அவன் செவ்வாயின் அழகுக்கு ஆட் பட்டும், ஏழுலகுக்கும் அவனே இறை என்று பறைசாற்றும் அவனுடைய நீண்ட திரு அபி ஷேகத்திற்குத் தலைவணங்கியும், அவன் செந் தாமரை விழிகளின் கடாட்சத்திற்குத் தன்னை அறவே விற்றும் இப்படி நாணத்தையும் நிறை யையும் இழந்து நிற்கின்றதே!'' என்கிறாள்.

அன்னையரும் தோழியரும் அவள் போக்கைக்கண்டு அவளைச் சினந்து கூறுகிறார்கள். மனம் வருந்திய தலைவி "எனக்கு ஆறுதல் சொல்லவேண்டிய அன்னைமார்கள் என் நிலைமையறியாது என்னைக் கோபிக்கிறார்களே. அவன் பிரிவால் என் நிறம் இழந்தது என்பதைப் பற்றி அவனைக் கேட்கப்போன என்னுடைய நெஞ்சு அங்கேயே தங்கிவிட்டதே. இனி யான் படும் பாட்டை யாரோடு சொல்லி ஆறுவது? என்று அங்கலாய்த்தனள்.

இழந்த என் மாமைத் திறத்துப்போன
என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்
உழந்து இனியாரைக்கொண்டு என் உசாகோ"

என்று ஏங்கியவளாய், தாய்மார்களே நான் அந்த,

"முழங்கு சங்கக்கையன் மாயத்து ஆழ்ந்தேன்
அன்னையர்காள் என்னை என் முனிந்தே"

வீணாக என்னைக் கோபித்து என்ன பயன்? என்று கேட்கிறாள்.

தாய்மார்கள் என்ன சொல்வது என்று அறியாமல் நிற்க, தலைவி மீண்டும் அவர்களை நோக்கி, "என்னை மீண்டும் மீண்டும் கோபிப்பதென்ன பயன்? வந்தவனே மாயக்கண்ணன். பதினாறுயிரம் கோபிகள் உள்ளத்தையும் கவர்ந்த ஆணழகன் ; மன்மதனுக்கும் மன்மதன். அவன் ஆணழகில் என் பெண்மை தோற்றுவிட்டது. ஆகவே நீங்கள் எனக்கேதேனும் உதவி செய்ய முடியுமானால்,

"முன்னி அவன் வந்து வீற்றிருந்த
கனிந்த பொழில்திருப் பேரையிற்கே
காலம்பெற என்னைக் காட்டுமின்"

வீண் காலதாமதம் செய்ய வேண்டாம். விரைவிலே செயல்படுங்கள்" என்கிறாள். அப்படி அவசரமா என்று கேட்கிறார்கள் தாய்மார்கள். ஆம், அவன் என் உள்ளத்தில் விளைவித்த "காதல் கடலின் மிகப் பெரிதால்" அவன் என் முன்னே இதோ நிற்கத்தான் செய்கிறான். ஆனால் கைக்குத்தான் அகப்பட மாட்டேன் என்கிறான். "அதென்னடி கிட்டே நிற்கிறான், பிடிக்க முடியவில்லை என்கிறாயே" என்று கேட்க, "ஆம் அவன் நீலமுகில் வண்ணன் அல்லவா? மேகத்தை நாம் பார்க்கிறோம் பிடிக்க முடிகிறதா? ஆகவே வீண்போது போக்காதீர்கள். என்னைத் திருப்பேரைக்குக் கொண்டு செல்லுங்கள் என்கிறாள். அவர்கள் அவ்விதம் செய்யாமையால், தலைவிக்கு ஒருவிதமான கசப்பும் வெறுப்புமே தோன்றுகிறது. தோழியை அழைக்கிறாள். "தோழி! என்னைவிட்டு அங்கு சென்ற என் நெஞ்சு இங்கு வருவதாகக் காணோம். இங்கு உள்ள எல்லோருமே என்னைக் கோபிக்கிறார்கள். போன என் நெஞ்சைத் திரும்ப என்னிடம் வருமாறு கூவச் சக்தியுடையவரையும் காணோம்; இனி யாரைக் கொண்டு தான் எனக்கு என்ன நடக்கப் போகிறது? என் நெஞ்சு சென்ற வழியே நான் செல்கின்றேன்.

"ஆரை இனிக்கொண்டு என்சாதிக்கின்றது?
என்நெஞ்சம் கண்டதுவே கண்டேனே"

என்றாள். அதற்குத் தோழி சொன்னாள் : "அம்மா இது உன் பெண்மைக்குத் தகாது ; நீ அவனை நெஞ்சாலே கண்டு இவ்வாறு புலம்புவது கண்டு ஊரில் எல்லோரும் உன்னையும் அவனையும் இணைத்துப் பலபடி பேசுகிறார்கள். இப்படி அவர்கள் பேசும்படி நீ நடப்பது நியாயமா? உன் தாய்மார்களும் உன்னைப் பற்றி என்னவெல்லாமோ சொல்லிப் புலம்புகிறார்கள். நீ செய்வது சரியல்ல" என்று சொல்ல, தலைவிக்கு ஓர் உற்சாகமே பிறந்துவிடுகிறது. "ஆகா! அப்படித் தூற்றுகிறார்களா? அவனையும் என்னையும் இணைத்து? அதுதானடி தோழி நான் வேண்டுவது. இந்த அலர் இருக்கிறதே தோழி! இதுதான் என் காதலுக்கு எரு. முன்னே என் காதல் கடலினும் பெரிதென்று சொன்னேன் அல்லவா? இந்த அலரைக் கேட்டது முதல் என்னுடைய காதல்,

"மண்திணி ஞாலமும், ஏழ்கடலும்
நீள்விசும்பும் கழியப் பெரிது."

என்று சொல்லும் அளவுக்குப் பெருகிவிட்டது. ஆகவே நான் திருப்பேரை போய்ச் சேர்வேன். கேட்டார்கள் தாயரும் தோழியரும். அவளைத் தேற்றி அங்கேயே தங்க வேண்டிக் கொள்கிறார்கள். அவள் நிறையைச் சுட்டிக் காட்டுகிறார்கள். அவள் கூறினாள்,

"சேர்வன் சென்று என்னுடைத் தோழியீர்காள்
அன்னையர்காள் என்னைத் தேற்றவேண்டா
நீர்கள் உரைக்கின்றது என்னிதற்கு
என்நெஞ்சும் நிறைவும் எனக்கிங்கில்லை"

நீங்கள் தேற்றிப் பிரயோசனமில்லையம்மா நான் இனி இங்கே தங்க முடியாது. அதற்குரிய திராணி என்னிடமில்லை. நீங்கள் வீணே பேசிப் பேசிப் பயனுமில்லை. நான் நேரே அவன் இருக்கும் தென்திருப்பேரை போய்ச் சேருவேன்" என்று தீர்மானமாக உரைக்கிறாள். "என்னடி ஒரு பெண்ணுக்கு வெட்கம் வேண்டாம்? தனியே வீட்டை விட்டுப் புறப்படுவாளாம்? தென்திருப்பேரைக்குப் போவாளாம்? நன்றாயிருக்கிறது ஒரு பெண்ணின் லட்சணம். சரி; தென்திருப்பேரை போகிறாய்; உன்னுடைய மாயக் கண்ணன் (அவன் மாயத்து ஆழ்ந்தேன் என்றாயே) அந்தப் புரட்டன் அங்கு இல்லையானால்? என்று கேட்கிறாள் தாய்.

நிமிர்ந்து நிற்கிறாள் தலைவி. "அப்படியா, அவன் என்னவோ என் நெஞ்சைக் கவர்ந்து சென்றுவிட்டான். தென்திருப்பேரையில்தான் இருக்கிறான் என்று நிச்சயித்து அங்குப் போகவும் துணிந்துவிட்டேன். நீங்கள் ஐயுறுவதுபோல் அவன் அங்கு இல்லையென்றால் இங்குத் திரும்பி விடுவேன் என்று நீங்கள் நினைக்கவேண்டாம். நானோ வெட்கத்தை விட்டாகிவிட்டது. ஊர் ஊராக, நகரம் நகரமாக, நாடு நாடாக அவன் எத்தனையோ இடங்களில் கோயில் கொண்டுள்ளான் என்கிறார்களே. அங்கெல்லாம் போய்த் தேடுவேன்" என்று துணிவுடனும் அழுத்தத்துடனும் போகின்ற தலைவியின் பாசுரங்களாக வருவது இத் தென்திருப்பேரையின் பதிகம்.

பிரேம பக்தி தலையெடுத்த பின், இறைவனைக் கிட்டுமளவும் அப்பக்தி வளர்ந்து அவனைக் கிட்டும் முயற்சியில் மேலும் முயன்று செயல்படுமே யன்றி, அவன் உடனே கிட்டவில்லை என்பதற்காகவோ பிறர் பித்தனென்று பேசி ஏசுவதற்காகவோ அஞ்சி, அவ்வழியினின்று ஒருக்காலும் மீளாது என்பதை உணர்த்துவதாகும் இப்பதிகம்.

***

# நம்மாழ்வார் அருளிய திருவிருத்தச் சிறப்பு

**முன்னுரை:**

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுள் தலைவராய்த் திகழ்பவர், நம்மாழ்வார்! அவர் அருளிச்செய்த பிரபந்தங்கள் நான்கு. அவைகள் முறையே, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்பனவாகும். இந்நான்கு பிரபந்தங்களும் முறையே, நான்கு வேதங்களின் சாரமாகக் கருதிப் போற்றப்பெறுகின்றன.

**பெயர்க்காரணம்:**

*(1)* 'திரு விருத்தம்' என்னும் இப் பிரபந்தத்தின் பெயர்க்குரிய காரணமாகப் பெரியோர்கள் பல வகை விளக்கங்களைக் கூறுவர். 'விருத்தம்' என்னும் சொல், தமிழில் 'கட்டளைக் கலித்துறை' என்னும் ஒரு வகைச் செய்யுளைக் குறிக்கும். 'குறள்' என்னும் செய்யுள் வகையினால் அமைந்த நூல், 'திருக்குறள்' எனப் பெயர் பெற்றாற்போல, விருத்தம் என்னும் செய்யுள் வகையினால் இயன்ற இந்நூலும், திருவிருத்தம் எனப் பெயர் பெறுவதாயிற்று.

*(2)* இனி, வடமொழியில் விருத்தம் என்னும் சொல், 'செய்தி' எனப் பொருள்தரும். ''இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை அடியேன் செய்யும் விண்ணப்பம் மெய்ந்நின்று கேட்டருளாய்'' என்று, ஆழ்வார் எம்பெருமான்பால் இவ்வுலக வாழ்வில் தமக்குள்ள வெறுப்பை விரித்துரைத்து, எம்பெருமானைக் கலந்து அனுபவித்தலிலேயே, தமக்குக் காதல் பெருகிக் கிளர்ந்தோங்கும் செய்திகளை வெளியிட்டு, விண்ணப்பத்துக் கொள்ளுகின்ற விதத்தில் அமைந்திருக்கும் காரணம் பற்றி, இதனைப் பெரியோர்கள் 'திருவிருத்தம்' எனப் பெயரிட்டுச் சிறப்பித்து வழங்குவாராயினர்.

*(3)* இனி, வேறொரு வகையாகவும், பெரியோர்கள் இதற்கு விளக்கம் கூறுவது உண்டு. இந்நூலின்கண் நம்மாழ்வார் ''ஞானத்தில் தன்பேச்சு; பிரேமத்திற் பெண் பேச்சு'' எனப்படும் முறையில், பெரும்பாலும் தம்மைப் பிராட்டியாகவே வைத்துத் தமது உள்ளத்திற் பொங்கிப் பெருகும் காதற் கனிவுணர்ச்சிகள் பற்றிய செய்திகளைவெளியிடுகின்றார். ஆதலின், திருவிருத்தம் என்பதற்குத் திருமகளின் செய்திகளைக் கூறும் நூல் (திரு—திருமகள்; விருத்தம்—செய்தி, காதற் செய்தி) என்றும் சிலர் பொருள் கூறுவர்.

**நூலின் சிறப்பு:**

திருவிருத்தம் என்னும் இந்நூலின் சிறப்பு எல்லையற்றது. இது, தமிழுக்குப் பெரிதும் சிறப்பாக உரிய அகப்பொருள் இலக்கணத்தினைத் தழுவி, அதன் துறை வகைகள் பல அமையப் பெற்றிருப்பது. சொற்றிட்பம், பொருள்நுட்பம், ஆழ்ந்து செல்லும் கருத்தமைதி, குறிப்புப் பொருள் நுணுக்கங்கள், கற்பனை நலங்கள் முதலிய கவிதைத் திறங்கள், பலவற்றாலும் ஒப்புயர்வற்றுச் சிறந்து திகழ்வது, இந்நூல்!

கசப்பு மருந்தினை உண்ண மறுப்பவர்க்கு, அவர் உவக்குமாறு அதன் மேலே இன்சுவை தீற்றிவைத்து உண்பிக்குமாறு போல, பாமர மக்கள் எளிதில் உணர்ந்து நுகர முற்படாத பக்திச் சுவையினை, அவர்கள்உவந்து நுகரும் வண்ணம், பண்புயர்ந்த காதற் சுவையாகப் பாங்குற அமைத்து, எளிய சிற்றின்பம் பற்றிக் கூறுவதுபோல, அரிய இனிய பேரின்பம் பற்றி அழகுற விளக்குவது, திருவிருத்தம் என்னும் இந்நூலின் சிறப்பியல்பாகும்.

மேலோடு காண்பவர் அறியும் வெளிப்படைப்பொருள் (அந்நியாபதேசம்); ஆழ்ந்து நுணுகி ஆராய்ந்து கற்பவர் உணரும் உள்ளுறை பொருள் (சுவாபதேசம்) என்னும் இருவகைப் பொருள்களையும், எழிலுறக் கொண்டு இந்நூல் விளங்குகின்றது.

**பக்தியுணர்வு:**

இறைவனிடத்து அன்பு செலுத்தி வழிபடும் அடியார்களின் பக்தியுணர்வு, பல வகைகளில் வெளிப்பட்டுச் செயற்படுவது உண்டு. இறைவனின் திருப்பெயர்களை இடைவிடாது சொல்லி மகிழ்தல், அவனது திருமேனியழகை விரித்துரைத்துப் புகழ்தல், அப்பெருமான்எழுந்தருளி விளங்கும் திவ்விய தேசங்களின் பெருமைகளைக் கூறி இன்புறுதல், அங்கே வாழ்கின்ற அடியார்களாகிய பெருமக்களின் பண்பு நலங்களைப் போற்றிப் பாராட்டிக் களித்தல், வாழ்வின் புன்மையையும் இறையருளின் மேன்மையையும் குறித்து உலகமக்களுக்கு உபதேசித்தல், முதலிய பற்பல வகைகளில், அடியார்களாகிய ஞானிகளின் பக்தியுணர்வு வெளிப்படும்.

இறைவனைக் கண்ணாரக் கண்டு, அவனது எல்லையற்ற அருளின்பத்திற் கலந்து திளைத்து மகிழும் ஞானச் செல்வர்கள், இறையருளில்

ஒன்றித் திளைத்து இன்புற்று மகிழுந்தோறும், அவ்விறைவனையே புருஷோத்தமன் என்று உணர்ந்து, அங்ஙனம் உணர்தலால், தாம் தம்முடைய தன்மையை அறவே இழந்துவிடுவர். இறைவனையே பிரிவற அடைந்து, இடையீடின்றிக் கலந்து அணைந்து மகிழ விரும்பும் தமது காதல் வேட்கை மிகுதியினால், அவர்கள் தம்மியல்பு முற்றிலும் அழியப் பெண்ணியல்பினராகப் பெரிதும் மாறிவிடுவர். இவ்வியல்பு உலகெங்கணும் உள்ள சமயச் சான்றோர்கள், எல்லோரிடத்தும் காணப்படுகின்றது. இஃது அவர்கள் தாமாக ஏறட்டுக் கொள்வதன்று; அவர்கள் மாட்டு இது தானாகவே வந்து பொருந்தி விடுகின்றது.

**'நாயக நாயகி பாவம்':**

"இந்திய நாட்டில், காதலர்கள் தம்முள் ஒருவரை ஒருவர் முதன்முதலிற் கண்களால் நோக்குறுதல் தொடங்கி, தம்முணர்விழப்பு எய்துவது ஈறாக நிகழ்கின்ற, மனிதவியற் காதல் நிலைகள் அனைத்துமே, புனிதம் மிக்க ஆன்மிக அருட்பொருட் குறிப்புடையனவாக விளங்குகின்றன. உணர்வரிய சிறந்த சமய நுண்பொருட் கருத்துக்களை உணர்த்துதற்கண், பாலியற் கருத்துருவகங்கள் அங்கே தடையின்றி நேரிதிற் கையாளப்பெறுகின்றன" எனக் கலையியற் பேரறிஞர் ஆகிய திரு. ஆனந்தகுமாரசுவாமி அவர்கள் கூறுதல், ஈண்டு உணரத் தக்கது.

"உலக இலக்கியங்கள் எல்லாவற்றிலும், இங்ஙனமே கவிஞர்கள்தாம் விரும்பும் கடவுளை, ஒரு பெண் தன் காதலன்பாற் கொள்ளும் பேரன்பு நிலைக்கு ஒப்புமை தோன்றக் காதலுற்றுப் பாடியிருத்தலைக் காணலாம். விவிலிய நூலிற் பழைய ஏற்பாடு என்னும் பகுதியிற் காணப்பெறுகின்ற 'பாடல்களுள் பாடல்' என்பது, இதற்குச் சிறந்த ஓர் எடுத்துக்காட்டாகும். கடவுளை மணமகனாகவும், உயிர்களையெல்லாம் அவனை மணந்து கொள்ளக் காத்திருக்கும் கன்னிப் பெண்களாகவும் ஒப்பிட்டு, இயேசுநாதர் இயம்புகின்றார். இடைக்காலத்தில் விளங்கிய கிறித்தவ சமய அருட்செல்வியர்கள் ஆகிய தூய தெரிசா அம்மையார், தூய கெர்ட்ரூட் அம்மையார் ஆகியோர், தம்மை இயேசுநாதர் தழுவிப் புல்லி மகிழ்வித்த அருளனுபவச் செய்திகளைக் குறித்து வைத்துள்ளனர். இவ்வாறே, தூய கேதரீன் அம்மையார், இயேசுநாதர்க்குத் தாம் பரிசம் இடப்பெற்றதாகவும், அவர் தமக்கு மண மோதிரம் ஒன்றைப் பரிசளித்ததாகவும் மொழிந்துள்ளார்.(1) இன்னோரனைய செய்திகள் ஈண்டு நாம் ஒப்புமையாகக் கருதியுணர்தற்குரியன.

ஆன்மிக ஞான வாழ்வின் தலைசிறந்த உச்சநிலை இறையருளனுபவக் கூறாக, இவ்வியல்பு அருளாளர்கள் யாவரிடத்தும் புலப்பட்டு விளங்குகின்றது. இந்நிலையைப் 'பகவத் விஷய காமம்' என்றும்; 'நாயக நாயகி பாவம்' (Bridal Mysticism) என்றும், 'பாலுணர்வு மேலுணர்வாதல்' (Sublimation of Sex-instinct) என்றும் சமயப் பேரறிஞர்கள் குறிப்பிடுவர்.

இத்தகைய பெருநிலையிற் பிறங்கி, நம்மாழ்வார் அருளிச் செய்த ஞானப் பெரும் பனுவலே, திருவிருத்தம் என்னும் இந்தச் சிறப்பு மிக்க நூலாகத் திகழ்கின்றது.

இதன்கண், ஞானப் பெருஞ் செல்வர் ஆகிய நம்மாழ்வார், தாமான தன்மையை இழந்து, பிரேமம் மிக்க பெண்மையியல்பு மேலிட்டுப் பிறங்கும் நிலையில், அரிய கடவுளனுபவச் செய்திகளை, அகப்பொருள் இலக்கணக் காதற்றுறைகளில் அழகுற அமைத்துப் பாசுரங்கள் பற்பல பாடியருளியுள்ளார். பராங்குசர் என்பது, நம்மாழ்வார்க்குரிய சிறப்புப் பெயர். புறச் சமயத்தவர்கள் ஆகிய யானைகளை அடக்குதலில் அங்குசம் போன்றவர் என்பது இதன் பொருள். இவ்வாறு பராங்குசர் என்னும் சிறப்புப் பெயர் பெற்றுள்ள ஆழ்வார், நாயகியுணர்வும் மெய்ப்பாடும் அமையப் பாசுரங்கள் பாடியருளும் நிலையில், பெரியோர்கள் அவரைப் பராங்குச நாயகி என்று குறிப்பிட்டுப் போற்றி மகிழ்வர். இவ்வண்ணம் ஆழ்வார் நாயகிநிலை அடைந்து, அருளனுபவத்தில் திளைத்து வெளியிடும் பாசுரங்கள், முறையே தாய்கூற்று, தோழிகூற்று, தலைவிகூற்று என்னும் மூவகைகளில் அமையும்.

காவிரியாறுனது, அங்கங்கே பல கால்வாய்களாகப் பிரிந்து, வெவ்வேறு பெயர்களைப் பெற்று விளங்குமாயினும், காவிரி என்னும் தலைமைச் சிறப்புப் பெயராலேயே வழங்கப் பெறும். அதுபோலவே, தாய் தோழி தலைவி ஆகிய மூவர் பேசும் நிலைகளில் அமைந்திருப்பினும், இவைகள் அனைத்தும் நம்மாழ்வார் ஒருவரின் ஞான நல்லருளுரைகளே என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இங்ஙனம் இறையருட் பக்தியுணர்வே இனிது கனிந்து முதிர்ந்து, காதற் சுவை மிகுந்த கடவுளியற் கவிதையாக வடிவெடுத்துத் திகழ்தலே, திருவிருத்தம் என்னும் இந்நூலின் இணையற்ற தனிப் பெருஞ் சிறப்பாகும்.

**கிடாம்பியாச்சான்:**

இத்தகைய இந்நூலின் ஏற்றம் மிக்க பெருஞ் சிறப்பினை, மிகவும் வியந்து, கிடாம்பி

---

(2) " Throughout the literatures of the world, the love of man for his Ishta Devata is likened to the love of a woman towards her lover and the bliss of communion is likened to the Joy of physical union.

The Biblical 'Song of Songs', the saying of Jesus Christ likening God to the bridegroom and the souls to virgins waiting for their spouse, the recorded experiences of medieval Christian saints St. Theresa, and St. Gertrude who recounted the caresses bestowed upon them by Christ, the assertion of St. Catherine that she was betrothed to Christ and a wedding-ring was given by him are all analogous."

—Dr. C.P. Ramaswamy Aiyar,
Phases of Religion and Culture, P. 99.

யாச்சான் என்னும் வைணவப் பெருஞ் சான்ருேர் ஒருவர், ''கருப்பப் பை ஆகிய வட்டமான குழியிற் பத்துத் திங்கள்தோறும் கிடந்து, அதனின்று வெளிப்பட்டு, நரை திரை மூப்புப் பிணி என்னும் பலவகைத் துயரங்களே விளேவிப்பதில் ஒப்பற்ற, கிழட்டுத் தன்மையைஅடைந்து, மிகவும் வருந்திப் பிறந்தும் இறந்தும் அலேந்து கொண்டிருக்கின்ற உலக மக்களே! உங்களுடைய உயிரானது அடைதற்குரிய நன்மைய்ாகிய பயன்களுக்கு, ஓர் இடையூறு கூட அணுகவொட்டாதபடி, திருக்குருகூர் என்னும் திவ்விய தலத்தில் தோன்றிய தலேவரான நம்மாழ்வார் அருளிச் செய்த திருவிருத்தம் என்னும் நூலில் உள்ள நூறு பாடல்களில், ஒரு பாடலின் ஓர் அடியையாவது கற்று உணர்ந்து கொள்ளுங்கள்; உணர்ந்து கொண்டால், நீங்கள் எம்பெருமான் எழுந்தருளி வீற்றிருக்கின்ற வைகுந்தம் என்னும் திருநாட்டில் மிக மேலான பேரின்பத்தை நுகர்ந்து கொண்டு வாழ்ந்திருப்பீர்கள்!'' என்னும் கருத்தமைய,

''கருவிருத்தக் குழி நீத்தபின்,
காமக் கடுங் குழிவீழ்ந்து,
ஒருவிருத்தம் புக்கு உழலலுறுவீர்!
உயிரின் பொருள்கட்கு
ஒருவிருத்தம் புகுதாமல்
குருகையர்கோன் உரைத்த
திருவிருத்தத்து ஓர்அடி கற்று
இரீர் திருநாட்டு அகத்தே''

என்னும் இனிய தனியன் ஒன்றினுல், கிடாம்பியாச்சான் என்னும் வைணவப் பெருந்தகையார், திருவிருத்தத்தின் சிறப்பினே விளக்கியிருத்தல் காணலாம்.

—ஆசிரியர்.



மதுரை சித்திரைத் திருவிழாவினே முன்னிட்டு, தமிழக அரசின் சுற்றுலா வளர்ச்சி வாரியத்தினர் நடத்தும் பொருட்காட்சியில், அமைந்துள்ள அறநிலேயத்துறையின் அரங்கிற்கு, அறநிலேயத்துறை ஆணேயர், திரு. எம். கே. பாலசுப்பிரமணியம், I.A.S., அவர்கள் வருகை தந்து பார்வையிடுதல்.

# திருச்சிற்றம்பலக் கோவையார்

(முற்றுடர்ச்சி)



தோழி : வேல் போலும் கண்ணை உடைய தலைவியே! தில்லைக் கூத்தனின் தாள்களைத் தன் முடிக்கு மலராக அணிகின்ற துறைவராகிய நம் தலைவருக்கு நேர்ந்த பழிகளை, நம் தாய் முன்னரே அறிவாள். அது மட்டுமின்றி, அதனை உலகத்தாரும் அறிவர். ஆதலால் நமக்கும் நம் தலைவருக்கும் இடையே நிகழ்ந்துவரும் காதற் களவொழுக்கத்தை நாம் நம் தாய் தந்தையருக்கும் உறவினர்க்கும், உள்ளபடி எடுத்துக் கூறி அறத்தொடு நிற்றலே நமக்கு முறைமையாகும். அங்ஙனம் அறத்தொடு நிற்குமிடத்து, நம் தலைவருக்குப் பழி நேரும்படி யான் எதனையேனும் கூறிவிடுவேனோ என்று, நீ சிறிதும் ஐயுற்றுக் கவலைப்பட வேண்டுவதில்லை. யான் நம் குடிக்கு அலர் கூறினும், நம் தலைவருக்குப் பழி நேரும்படி எதனையும் கூறமாட்டேன். (291)

வெறியாட்டில் தெய்வமேறி ஆடுகின்ற வேலனே! இவ்வெறியாட்டு விழாவின்கண் வேரி (கள்) உண்ணுதற்கு விதி உடையவர்கள், அதனை உண்பார்களாக! யாம் அதனை வேண்டாம் என்று விலக்கவில்லை. அம்பலமாகிய இருப்பிடத்தை உடையவனாகிய சிவபெருமானின் திருப்பரங்குன்றத்தில், பொங்கிப் பரவிப் பெருகிய வெள்ளத்தினால் யாம் ஈர்க்கப்பட்டு அடித்துச் செல்லப்பட, அங்கு எம்மை அவ்வெள்ளத்தினின்று எடுத்துக் காப்பதன் பொருட்டு, தற்செயலாக வந்த தலைவனின் ஒளி மிகுந்த தோள்கள் இருக்கும்பொழுது, அவற்றை விட்டு விட்டு, இத்தலைவிக்கு உற்ற நோயைத் தீர்ப்பதற்கு வேறு ஓர் உபாயத்தைக் கருதுகின்ற வெறியாட்டுத் தெய்வமே! நின்னைப் போன்ற அறிவுடையவர்கள், இவ்வுலகத்தில் இப்பொழுது வேறு யாரும் இல்லை.

(தலைவி உற்ற நோய்க்குக் காரணம், அருவியின் வெள்ளத்தினின்று அவளைக் காத்து உதவிய தலைவனின் தோள்களே யாகும். அத்தலைவனை மணந்து அவனது தோள்களைத் தழுவி அணைதலே, தலைவியின் நோய் தீர்தற்கு உரிய மருந்தாகும். இதனைத் தெரிந்து கொள்ளாமல், தலைவியின் நோய்க்கு வேறு ஏதோ காரணம் இருப்பதுபோல எண்ணிக்கொண்டு, இவ் வெறியாட்டு நிகழ்த்துதலும், இதன்கண் வேலன் தெய்வம் ஏறினான் போல நடித்துப் பல கூறி ஏமாற்றுதலும், அறிவுடைமையன்று என்பது, இத் தோழி கூற்றின் கருத்து. தோழியின் இக்கூற்றைக் கேட்டுத் தலைவியின் தாய் தந்தையரும் பிறரும், நீ கூறுவது என்ன என்று விவரமாக வினவத் தலைப்படுவர். அப்போது தோழி அறத்தொடு நின்று, தலைவிக்கும் தலைவனுக்கும் இடையே நிகழ்ந்துள்ள காதல் ஒழுக்கத்தினை விளக்கிக் கூறுவள் என்பது, இப்பாடலின் கருத்து). (292)

செவிலித் தாயே! இன்று யான் என் உள்ளத்தில் களிப்பு மிகப் பெற்று, மகிழ்ச்சியில் இன்புற்றுத் திளைக்கும் வண்ணம், தன்னுடைய கழலணிந்த திருவடிகளை எனக்கு அளித்தருள்கின்ற அம்பலவாணரின் கயிலாய மலைக்கண், எமது தினைப் புனத்தின்கண் வரும் சிவந்த வாயை உடைய பசுமையான கிளிகளைத் துரத்தி நாங்கள் காவல் புரிகின்ற இடத்திற்கு வந்த, தலைவர் ஒருவர், எங்கள் மீது பாய்ந்து கொல்ல வந்த மத யானையைத் தடுத்து நிறுத்திக் கொன்றார். இச்செய்தியை யான் நினக்குக் கூறிவிட்டேன். இனி நீ அடுத்துச் செய்யத் தக்கதனைச் செய்வாயாக! (293)

செவிலி : தேவர்கள் தம் தலையைச் சாய்த்து வணங்கியும் வாழ்த்தியும் போற்றுகின்ற திருச்சிற்றம்பலவனின், கயிலை மலையின் கண் இடைவிடாது பயின்று பழகி வரும் செல்வியும், இளமை மிக்கவளும் ஆகிய நம் புதல்வியின் சிறப்பினை என் சொல்லிப் புகழ்வேன். முதன் முதலாகத் தோன்றும் இரண்டு பற்களும் முளைக்கப் பெறாத மிக இளம் பருவத்தில் தானே, இவள் பெரிதும் அறிவு முதிர்ந்து திகழ்கின்றாள்.

(தன்னைக் களிற்றினிடமிருந்து காப்பாற்றி உதவிய வீரத் தோன்றலையே, இவள் தன் கணவனாக வரித்துக் கொண்டு, காதலித்துக் கற்பொழுக்க நெறியில் நிற்கத் தலைப்பட்டுவிட்டாள். மிக இளம் பருவத்தினளாயிருந்தும், இவளுக்கு இத்தகைய கடமைப் பொறுப்புணர்வு மிக்க கற்பொழுக்கம் வாய்த்தமை, பெரிதும் வியந்து போற்றத் தக்கதாகும்.)

தோழி : மெல்லிய இயல்பை உடைய தலைவியே, வண்டினங்கள் ஆரவாரித்து, தேனை அருந்தும் கொன்றை மலரை அணிந்த தில்லையம்பலவனின் கரிய கடலிடத்தில், பறவைக் கூட்டங்கள் ஆரவாரிக்கவும், கரைமீது வந்து மோதும் அலைகள் ஆரவாரிக்கவும், மங்கல வாழ்த்துக் கூறும் புலவர் கூட்டங்கள் மகிழ்ச்சியினால் ஆரவாரிக்கவும், நறுமணத்தின் இனிமையினால் வண்டுகள் ஆரவாரிக்கவும், வெண்

மையான வலம்புரிச் சங்கு ஒலிக்கவும், இதோ இந்தப் பெரிய தேர் வந்து கொண்டிருக்கிறது. *(295)*

மனையிலுள்ளோர் : *பழையவராகிய பிரமன் திருமால் முதலியவர்களுக்கெல்லாம் காரணமாய் உள்ளவரும், நெற்றிக் கண்ணை உடையவரும் ஆகிய சிவபிரானின், கடல்சூழ்ந்த தில்லை மாநகரைப் போன்றவளும், வாரால்கட்டப்படும் நிலையை எய்திய முலைகளையுடையவளுமாகிய தலைவிக்குத் திருமணம் என்பதனை அறிவித்து மணமுரசு ஒலிக்கின்றது. அதனால் நாம் வாயில்கள்தோறும் மங்கல நீர் நிறைந்த பூரண பொற்குடத்தை வைப்போம். மணியும் முத்தும் பொன்னின்கண் அழுத்திச் செய்யப்பெற்ற தோரணத்தினை எங்கும் கட்டுவோம். திருமண நிகழ்ச்சியின் அறிகுறியாகப் பலவகை மங்கலத் தூரியங்கள் எங்கும் முழங்கச் செய்வோம்.* *(296)*

தலைவி : *நமது சிறந்த இல்லத்தின்கண், மிகவும் மகிழ்ச்சி பெருகுமாறு முழங்குகின்ற இப்பெரிய முரசத்தின் ஒலியானது, பிறவியால் வரும் துன்பமும் இன்பமும் கெட்டொழிய, இயல்பாகிய பேரின்பத்தை, யாவராயினும் அன்பராயினர்க்கு வரையாது கொடுப்பவனும், தேனை உண்டு வண்டுகள் இன்புற்றொலிக்கும் சோலைகள் நிறைந்த தில்லைக்கண் உள்ளவனுமாகிய சிவபிரானின் திருமலையில், நம்மை எதிர்த்துக் கொல்லவந்த மத யானையைக் கொன்று, நம்மைக் காப்பாற்றிய தலைவரின் பொருட்டோ? அல்லது நம்முடன் யாதோர் இயைபும் இல்லாத அயலவர் பொருட்டோ? யான் அறிகின்றிலேன்.* *(297)*

தோழி : *தலைவியே! கடையாகிய என்னிடத்தும், யான் பிற தெய்வங்களை வணங்கி வருந்தாதபடி, என்பால் இரக்கம் கொண்டு, தனது கடைக்கண் நோக்கத்தினை வைத்தருளிய சங்கரனார் ஆகிய சிவபெருமானின் திருமலையின்கண், தமக்கு ஒரு பயனையும் கருதாமல், நமக்கு இறுதியைப் பயக்கவிருந்த ஒரு கொடிய மத யானையை, அன்றொரு நாள் வென்று கொன்றவராகிய நம் தலைவர், நம்மவர் விரும்பியபடியே, அருங்கலங்கள் பலவும் கொடுத்து, நின்னை வரைந்து மணம் செய்து கொள்வதற்காக, செல்வத் திரளெலாம் கொணர்ந்து சேர்ப்பித்து விட்டார். இதோ நம் வீட்டு வாயிலின் முன் பெருஞ் செல்வம் வந்து குவிந்து கிடக்கின்றது. இதனை நீ காண்பாயாக!* *(298)*

## 19. மணஞ்சிறப்புரைத்தல்

*[தலைவனும் தலைமகளும் வரைந்து கொண்ட பின்னர், அவர்களுக்கு நிகழ்ந்த திருமணத்தின் சிறப்பினை விவரித்துக் கூறுதல்].*

தோழி : *அழகிய சிறந்த மேகலையை அணிந்த தலைவியே! அரி அயன் முதலிய யாவர்க்கும் முற்பட்ட அரசனாகத் திகழ்கின்ற மிகப் பெரியவனாயினும், மிக எளியவனாய்த் தில்லையம்பலத்தின்கண் நின்று ஆடுகின்ற முதல்வன் ஆகிய சிவபிரானின் திருவருளைப் பெற்றவர்கள்போல, நாம் துயர் தீர்ந்து மகிழும்படி, தேன் பெருக்கும் மலையின்கண் யானையினை வென்று கொன்ற நமது காதலராகிய தலைவரின் முரசானது, நமது இல்லின்கண் பெரிதும் ஒலியா நின்றது. அதுமட்டுமின்றி, வெறியாடல் காரணமாக ஒலித்த முருகியம் நீங்கா நின்றது. எனவே நாம் நம் காதலரை மணந்து கொள்ளப் போவது திண்ணம். இனி நமக்கு யாது குறை?* *(299)*

அன்பர்கள் துதிக்க, அவர்கள்பால் தான் ஏற்றுக் கொள்ளுகின்ற சிறப்பு மிக்க பெருந் துதிப்பாடல்களை, என்னிடமிருந்து தானே உண்டாக்கிக் கொண்டவனும், யான் எப்பொழுதும் நினைத்து மகிழும்வண்ணம் சுவை மிக்க மருந்தாக விளங்குபவனும், திசைமுகன் திருமால் ஆகியவர்களுக்கு அரியவனும் ஆகிய சிவபெருமானின் தில்லையின்கண், சிலம்பனாகிய எம் தலைவன் கொணர்ந்து தந்த பெறுதற்கரிய தழை உடைகள், இப்பொழுது தீயை முன்னர் வலங்கொண்டு, பின்னர் வசிட்ட முனிவரின் இடப்பக்கத்தில் தோன்றும் அருந்ததியினைக் காணுகின்ற வரையிலும், தில்லையை வாழ்த்தியவர்களைப் போலவே வாடாதிருந்து விளங்கின.

(திகழுதல்—விளங்குதல். தில்லையை வாழ்த்துபவர்கள் எக்காலத்தும் எதனாலும் வாட்டமின்றி மகிழ்ச்சியுற்று விளங்குவர். அது போலச் சிலம்பன் தந்த தழையும் வாடாதிருந்தது என்பாள், ''தில்லைவாழ்த்தினர்போலத் திவண்டன'' என்றாள். தழைகளை வாடவிடாமல் வைத்திருந்து, அத் தழையின் துணையே பற்றுக்கோடாக, தலைமகள் ஆற்றியிருந்தாள் எனத் 'தோழி தலைவியைப் புகழ்ந்து மகிழ்ந்தாள். திவண்டன என்பதற்குத் தழை வாடாதிருந்து தலைவியைத் தீண்டி இன்புறுத்தின என்று பொருள் கொள்ளினும் பொருந்தும். தழைகள் வாடாதிருந்தன என்பது, தான் முன்னர்த் தலைவன் தந்த தழையினை ஏற்ற நல்ல முகூர்த்தத்தினை நயந்து வியந்து கொண்டாடுதற்கு) (300)

தோழி : *அன்பு மிக்க அருமைத் தாயே!* மேகம் போலும் நீலநிறமான கண்டத்தை உடைய சிவபிரானின் தில்லையை வணங்குகின்ற எம்முடைய தலைவரும், எம் தலைவியும் உயிரும் உடம்பும்போல, ஒருவரை யொருவர் இன்றியமையாத இயல்பினராக உள்ளனர். அதனால் அவர் எம் தலைவியின் நெஞ்சகத்திலிருந்து ஒரு சிறிதும் நீங்காமல் உள்ளார். தாமரைப் பூவைச் சேர்ந்த தேனும், சந்தன மரமும் இடத்து நிகழ்பொருளும் இடமுமாய் இயைந்து, தம் பெருமையைப் புலப்படுத்துவது போல, எம் தலைவரும் தலைவியும் ஒருவரோடு ஒருவர் இணைந்து பிணைந்து இயைந்து சிறந்து விளங்குகின்றனர். தலைவர் தலைவியின் வழிபாட்டிற்கு இயைந்துநின்று ஏற்புற நடந்து கொள்ளுகின்றார். இருவரின் வாழ்க்கையும் இனிது நிகழ்ந்து வருகின்றது.

*('எண்ணகலார்' என்றதனால் காதலியாதலும், 'கற்பின் நிற்பர்' என்றதனால் வாழ்க்கைத் துணையாதலும் கூறப்பட்டன. தலைவர் உடலாக உள்ளார். தலைவி உயிராக உள்ளாள். தலைவர் தாமரையாக அமைய, தலைவி தாமரை மலர்களில் ஊறும் வேரி (தேன்)ஆகத் திகழ்*

கின்றாள் என்பார் ''சீரியல் ஆவியும் யாக்கையும் என்னச் சிறந்து, கமலம் கலந்த் வேரியும் சந்தும் வியல் தந்தெனக் கற்பின் நிற்பர்'' என்று தோழி செவிலிக்குக் கூறினாள். ''காரியல் கண்டர் வண் தில்லை வணங்கும் காவலர்'' என்றதனால், இவர்களின் இல்வாழ்க்கை இன்று போலவே என்றும் இனிது நிகழும் என்பது குறிக்கப்பெற்றது. *(301)*

செவிலி : தொண்டர்களின் கூட்டத்தைத் தேடிச் சென்றுசேருகின்ற, சுடர்க்கழலை உடைய சிவபிரானின் தில்லை நகரில், யான் கண்ட நம் புதல்வியின் இல்லம், நம் இல்லத்தைப் போன்று உள்ளது. நம் புதல்வியின் கணவனாகிய திண்தோள்வீரன், நின் கொழுநனைப் போன்றே சிறந்தவனாக உள்ளான். நம் புதல்விக்குக் குற்றேவல் புரிபவள் என்னைப் போன்றவளாகவே இருக்கின்றாள். நம் புதல்வியின் இல்லத்திற்கு அயலிலுள்ளோர், நம் இல்லத்திற்கு அயலில் உள்ளவர்களைப் போலவே நல்லவர்களாக உள்ளனர். நும் புதல்வியாகிய தலைவியின் வாழ்க்கை, எல்லா வகையாலும், நல்லபடியே அமைந்து நடைபெற்று வருகின்றது.

(தலைவனின் ஆண்மை கூறுவாள், ''திண்தோளவன்'' என்றும்; தலைவியின்பால் அவன் கொண்டுள்ள அன்பும் பரிவும் குழைவும் உணர்த்த ''மென் தோளவன்'' என்றும் கூறினாள். ஆடவனின் தோளைத் திண்ணிது என்று குறிப்பதே பொருத்தமும் மரபும் ஆயினும், தலைவியாகிய தன் புதல்வி அணைத்துத் தழுவுங்கால், ஊற்று இன்பம் மிக விளைவிக்க வல்லனவாதலை உணர்த்த, தலைவனின் தோளிற்கு மென்மை கூறினாள்.) *(302)*

திருமுடி போலக் கட்டப்பெற்ற அழகிய நீண்ட சடையை உடைய சிவபெருமானின் தில்லையைப் போன்ற நம் புதல்வியின் காதலன், இவளது இடை இற்றுப்போய்விடும் என்று கருதி அணிகலன்களைப் பூட்டி, வீணே அழகு செய்யமாட்டான். மென்மையான கால்கள் வருந்துமே என்று அஞ்சி மலரின்மேல் அன்றி, வெறும் தவிசினை மிதித்து நடந்து செல்லுமாறு விடமாட்டான். வண்டுகள் வந்து மொய்த்துச் சுமையினை மிகுதியாக்கிவிடுமே என்று அஞ்சிக் கூந்தலில் மலர்களையும் சூட்டமாட்டான். இது மட்டுமோ, மிகுந்த பாரமாகிவிடும் என்று கருதி இவளது நெற்றியில் பொட்டும் இடுதற்கு இசையமாட்டான். நம் மகள் மீது அவளுடைய காதலன் கொண்டுள்ள அளப்பரும் காதல் திறம் இது! *(303)*

தெய்வங்கள் எல்லாம் வணங்கும் திருவடிகளை உடைய சிவபிரானின், தில்லைச் சிற்றம்பலம் போன்ற நம் புதல்வி, தன் காதற் கணவனைத் தவிர, வேறு எந்தத் தெய்வத்தையும் எஞ்ஞான்றும் பணிந்து அறியாள். அவ்வாறே, அவளது காதலனும், தனக்குத் திறைகொடாத பகைவரை அடக்கிப் பணியச் செய்து திறை கொள்ளச் சென்றாலும், அன்றன்றும் அவளது இல்லத்திற்குத் திரும்பி வந்து சேர்தல் அல்லாமல், அவளைப் பிரிந்து வேறு எங்கும் தங்கி அறியமாட்டான். கடலில் தோன்றும் மணி போலப் பெருங்குடியில் பிறந்த தூயோராகிய இவ் இருவரின் இயல்பும், இங்ஙனம் பெரிதும் சிறந்து திகழ்கின்றது. *(304)*

நுட்பமான சிற்பங்கள் விளங்கும் திண்ணிய மதில்களை உடைய தில்லையில் உள்ள சிற்றம்பலவனின் திருப்பூவணம் போன்றவளாகிய நம் புதல்வியின் கற்பு, அந்திக் காலத்தில் தோன்றும் வடமீனாகிய அருந்ததியையும் வெற்றி கொள்ளும். அத்தகைய அவளது கற்பின் மாட்சிமையால், அவளது காதற் கணவன் மேற்கொள்ளும் செயல்களெல்லாம், ஒரு சிறிதும் இடையூறு இன்றிச் சிறப்புடன் நிறைவேறும். எனவே அவன் ஊர்ந்துசெல்லும் மதகளிறு நாடு கடந்து நெடுந் தொலைவு செல்ல நேரினும், அன்றன்று அவனது இல்லின்கண் யானைகள் கட்டப்படும் பந்திகளிலன்றி, வேறு எவ்விடத்திலும் தங்கமாட்டாது.

[விண்மீன்கள் பலவும் அவ்வப்போது நிலை பெயர்ந்து செல்லா நிற்கவும், வடமீன் (Pole Star) என்னும் அருந்ததி நட்சத்திரம் மட்டும், என்றும் ஓரிடத்திலேயே நிலைபெற்று நிற்கும். அதுபோலக் கற்பு என்பதும், ஒருவர்மாட்டுக் கொண்ட காதலின் நெறியும் நிலையும் மாறாமல், என்றும் ஒரு தன்மையாய் விளங்குவது ஆதலின் அதற்கு ''வடமீன்'' உவமையாகக் கூறப்பெறும். அஃது அந்திக் காலத்தில் கற்புடை மகளிரால் தொழப்பெறுதலின் ''அந்திவாய் வடமீன்'' எனப்பட்டது. கணவன் ஒருவன் மேற்கொள்ளும் செயல்கள் அனைத்தும் வெற்றியுற நிகழ்வதற்குப் பெரிதும் துணைபுரிவது, அவனுடைய அறிவு திரு ஆற்றல் முதலியன மட்டுமேயல்லாமல், அவனது மனைவியின் கற்புநலனே என்பது, இப் பாடலின்கண். உரையாசிரியரால் நுண்ணிதில் விளக்கப் பெற்றுள்ளது. ''கற்புப் பயந்த அற்புதமாவது, படிகடந்தும் கடிது வரும் வண்ணம் எடுத்துக் கொண்ட வினையை இடையூறு இன்றி இனிது முடித்தல்'' எனவரும் உரையாசிரியரின் விளக்கம் பொன்னினும் மணியினும் போற்றத் தக்கதாகும்.] *(305)*

அரசனது பகைமுனை மேல் ஏவப்பட்டுச் சென்ற வழியும், நம் மகளின் கணவனும், பெரிய அரியேறு (சிங்கம்) போன்றவனும் ஆகிய தலைவனின் தேரானது, தனது நிலையான இடத்தில் அன்றி, வேறு எங்கும் தங்காது; வரகுணன் என்னும் பாண்டிய மன்னனால் துதிக்கப்படும் சிற்றம்பலவனும், பிற தேவர்களுக்கெல்லாம் முற்பட்ட முதல்வனும் ஆகிய சிவபெருமானின் மூவலூர் என்னும் தலத்தைப் போன்ற அழகும் சிறப்புமுடைய நம் மகளும், தனது கணவனைத் தவிர வேறு எந்த ஒரு தெய்வத்தையும் மனத்தாலும் நினைக்கமாட்டாள். *(306)*

தலைவன் தலைவி ஆகிய இருவரது காதலும் களிப்பும், இன்ப வெள்ளத்தில் திளைக்கப் புகுகின்ற ஓர் உயிரானது, ஓர் உடம்பினால் இன்பம் துய்த்தல் ஆராமை காரணமாக, இரண்டு உடம்புகளைக் கொண்டு, அவ்வின்ப வெள்ளத்தில் கிடந்து திளைத்து மகிழ்ந்தது போலும். அது மட்டுமே அன்றித் தில்லையம்பலவனின் திருவருளைப் பெற்றவர்களின் இன்பம் போல, இவர்கள் எய்தி நுகரும் இன்பமும், ஒரு காலத்தும் குறைவுபடாமல் மேன்மேற் பெருகி வளரும்; இவர்களின் சேர்த்தியாகிய அணி நலமும் (அழகும்கூட), முதுமையுறாது எஞ்ஞான்றும் ஒரு தன்மையுற்று இளமை வளமை நிறைந்து திகழும். *(307)*

—தொடரும்.

# கந்தபுராணக் காப்பிய நலம்

''திருக்குறள்மணி''
திரு. க. த. திருநாவுக்கரசு அவர்கள், M.A., M.Litt.,
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை–20.

(முற்றொடர்ச்சி)

**கலையழகும் கற்பனைவளமும்:**

கந்தபுராண ஆசிரியர் மதிநுட்பம் நூலொடு உடையார். அவர் காலத்திய அறிவுத்துறைகள் பலவற்றில் பயிற்சியும் தேர்ச்சியும் உடையவராக அவர் தோன்றுகிறார். பல்கலைச் செல்வராக விளங்கிய அவர், இனிய கவிபுனையும் ஆற்றல்பெற்ற பெரும் புலவராகவும் விளங்குகிறார். தமிழ்கூறும் நல்லுலகம், பெரிதும் அவரைக் கவிஞராகவே போற்றிவருகிறது. அவர்படைத்த கந்தன் காதை சிந்தைக்கினிய கருத்தோவியங்களால், கவின்மிகு கற்பனை வளத்தால், உள்ளத்தைக் கவரும் உயிர்த்துடிப்புமிக்க சொற்சித்திரங்களால் ஏரும் எழிலும் பெற்றுள்ளது. இப் பண்புகளே இந்த ஆசிரியரின் படைப்பாற்றலை வெளிப்படுத்தும் பான்மையன. ஆசிரியரின் படைப்பாற்றல் பலவகை இலக்கியத் திறன்களால்-உத்திகளால் ஊட்டமும் உரமும் பெற்றுள்ளன. அவருடைய கலையுணர்வும் உணர்ச்சிப் பொங்கலும், அவருடைய இலக்கியத்தை இன்றும் 'வாழும் இலக்கியமாகப்' புகழ் பெறச் செய்துள்ளன.

**பாயிரமும் அவையடக்கமும்:**

கச்சியப்பர் பயன்படுத்தியுள்ள இலக்கிய உத்திகள் பல. அவற்றுள், சிலவற்றை நாம் இங்குக் காண்போம். பொதுவாக இலக்கியங்களைப் படைப்போர் தம் வழிபடு தெய்வத்தையோ, ஏற்புடைத் தெய்வத்தையோ ஏற்றிப் போற்றி, வாழ்த்தி வணங்கி, தம் நூலினைத் தொடங்குவர். இது பண்டை உலகில் காணப்படும் பொதுவான ஒரு மரபு. நம் ஆசிரியர் பாயிரப் பகுதியிலும், கடவுள் வாழ்த்துப் பகுதியிலும் சிவபெருமான் முதல் பல்வேறு தெய்வங்களுக்கு வணக்கம் செலுத்தியுள்ளதை நாம் முன்னரே கண்டோம். இதற்கு அடுத்து, நூலின் வரலாறு கூறும் பகுதியில், ''அவையடக்கத்தை'' அமைத்து, அதில் தம்முடைய சிற்றறிவையும், தம் நூலில் காணப்படும் குறைகளையும் அறிஞர் பொறுத்தருள வேண்டும் என்னும் பொருள் அமையப் பாடியுள்ளார். இவை, அவர் காலத்தில் நன்கு வழக்கிற்கு வந்துவிட்ட மாபெரும் மரபாகும்.

**காண்டந்தோறும் கடவுள் வாழ்த்து:**

இதனோடு அமையாது ஒவ்வொரு காண்டத்தின் தொடக்கத்திலும், தம் இலக்கியத்தின் கதைத் தலைவனாகிய குமரக் கடவுளைப் போற்றி அவர் வழிபடுகின்றார். இம்முறையினை இவருக்கு முன் காப்பியம் படைத்த தேவர், சேக்கிழார், கம்பர் முதலாயினோர் பின்பற்றியுள்ளனர்.

**நுதலிப் புகுதலும், நுவல்வேன் எனலும்:**

ஒரு நெடுங்கதையைத் தொடர்ந்து சொல்லும் ஆசிரியர், ஒரு பகுதியை முடிக்கும் பொழுதும் மற்றொரு பகுதியைத் தொடங்குகின்ற பொழுதும் தொகுத்துக் கூறியும், கோடிகாட்டியும் செல்லுவது கதை கூறுவதில் அவருக்குரிய கலைத்திறனைப் புலப்படுத்துவதாகும்.

**அணிநலம்:**

கவிஞனுடைய படைப்பாற்றலை மதிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படும் அளவு கோலாகக் கற்பனைத் திறனைக் கூறுவர். அன்றாட வாழ்க்கையில் நாம் காணும் மிகச் சாதாரண பொருள் கூட, புலவனுடைய கற்பனைத் திறத்தால் கலையழகு வாய்ந்த கவின்பொருளாக மாறிவிடுகிறது. கச்சியப்பரின் காப்பியத்தில், எழில் மிகு கருத்தோவியங்கள் பலவற்றை நாம் காணுகின்றோம். இக்கருத்தோவியங்கள், உவமை உருவகம் தற்குறிப்பேற்றம் இரட்டுறமொழிதல் போன்ற இருபதுக்கும் மேற்பட்ட அணிவகைகளால் அமைந்துள்ளன.

எவ்வாறோ கடல் நடுவில் சிக்கிக் கொண்டது ஒரு காகம். அதனால் பறந்து சென்று கரையை அடைய முடியவில்லை. மனக்கலக்கம் உற்ற காகத்தின் கண்களிலே ஒரு மரக்கலம் தென்படுகிறது. உடனே, அது விரைந்து சென்று, அம்மரக்கலத்தில் உள்ள பாய்மரக் கம்பின் உச்சியில் அமர்ந்து கொண்டது. எக்காரணத்திற்காகவும், அந்த இடத்தைவிட்டு நீங்காது, கரைசேரும் வரை அங்கேயே இருந்தது. இதைப் போல நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானுடைய திருவடிகளைப் பற்றெனப் பற்றியவர் அதைவிட்டு நீங்காத உள்ளத்தினராய், இடைவிடாது வழிபடலாயினர் என்பது கச்சியப்பரின் உவமைத் திறத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

*நலத்தகு கண்ணுதல் நாதற் சேர்ந்தனர்*
*கலத்தலை யகன்றிடாக் காசம் போலவே*

*(1:11:54)*

கதிரவன் தோற்றம், மறைவு ஆகிய இரண்டையும் நயமுற வருணிக்காத கவிஞர்களே உலகில் இல்லை. சூரிய உதயத்தைப் பத்துக்கு மேற்பட்ட இடங்களில் கச்சியப்பர் படம் பிடித்துக் காட்டுகின்றார். இதைப்போன்றே ஞாயிற்றின் மறைவினையும் பலவிடங்களில் கவினுறப் படைத்துள்ளார்.

கங்குல் எனும் காரிகையை அவளுடைய காதலனாகிய மதி, இருளாகிய அவளுடைய ஆடையை, நிலவாகிய, தன் கைகளால் நீக்கி, அவளுடன் கூடி மகிழ்ந்து, ஓடிவிடுகின்றான். அச்சமயத்தில் அந்நங்கை தன்னுணர்வு பெறுகிறாள். கதிரவன் வந்தால், நம் அலங்கோலத்தைப் பார்த்து விடுவானே என எண்ணுகிறாள்! வெட்கம் மேலிடுகிறது. உடனே, இருள் எனும் துகிலினைச் சுற்றிக்கொண்டு அவ்விடத்தைவிட்டு விரைந்து ஓடி அவள் மறைந்து விடுகிறாள்: இவ்வாறு வைகறைப் பொழுதினைப் புலவர் வருணிக்கிறார்.

மையிருட் கலையினை மகிழ்நனும் மதிநிலாக்
கையினால் நீக்கியே கலவிசெய்து அகலுழி

செய்யவன் வருமெனா வெள்கியத் துகில்உடீஇ
ஒய்யெனப் போயினாள் கங்குலென் றுள்ளாள்.
(4-3-393)

பானுகோபனைக் கொல்ல வேற்படையை வீசுகின்றான் வீரவாகு. அதைக் கண்டு மிகவும் தேவர்கள் மகிழ்கின்றனர். அவுணர்கள் அஞ்சுகின்றனர். இதனை,

அடிகள் விட்டிடும் வேற்படை
எனப்படும் அலரி
கடிது சேறலும், வானவர்
வதனமாம் கமலம்
நெடிது மாமகிழ் வெய்தியே
மலர்ந்தன; நெறிதீர்
கொடிய தானவர் முகமெனும்
குவளைகள் குவிய
(4:5:192)

கதிரவன் வரவைக் கண்ட தாமரை மலர்வதும், குவளை கூம்புவதும் இயற்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளாகும். வேல் எனும் சூரியனை (அலரி)க் கண்ட தேவர்கள் முகம் மலருகிறது. எனவே, அது தாமரை மலர்வதைப்போல் தோன்றுகிறது. அசுரரின் முகம் வாடுகிறது. இதனால், அவர்கள் முகம் கதிரவனைக் கண்ட குவளையாகிறது எனப் பொருள் நயம் பயக்க முரண்பட்ட பொருள்களையும், செயல்களையும் ஆசிரியர் காட்டுகிறார். இதனை முரணணி என்பர்.

சூரபதுமன் திக்குவிசயத்திற்குப் புறப்பட்டான். அதைக் கண்டு அண்ட சராசரங்கள் எல்லாம் நடுங்கின. இதை,

பூந டுங்கின பணிக்குலம் நடுங்கின புரைதீர்
வான டுங்கின மாதிர நடுங்கின வரைகள்
தாம் நடுங்கின புணரிகள் நடுங்கின தறுகண்
தீந டுங்கின நிருதர்கோன் பெரும்படைசெல்ல
(2:12:29)

என ஆசிரியர் ஒலிநயத்தோடு புலப்படுத்துகின்றார். 'நடுங்கின' எனும் ஒரே சொல், இரண்டாம் சீரிலும், நான்காம் சீரிலும் முதல் மூன்று அடிகளில் தொடர்ந்து வந்தும் சந்த இன்பம் பயக்கின்றது. இவ்வாறு ஒரு சொல் திரும்பத் திரும்ப வருவதை மடக்கு எனும் சொல்லணியுள் 'இடைமுற்று மடக்கு' எனக் கூறுவர்.

பேசுகின்றபொழுது இருபொருள்படப் பேசுவதை ஒருவகைத்திறமையாக நாம் போற்றுகிறோம். செய்யுளில் இத்திறன் கையாளப்படுமானால், அதனை இரட்டுற மொழிதல் எனும் அணியாகப் போற்றுவர்.

வள்ளியம்மையைக் காண முருகன் வருகிறான். அவளொடு உரையாடிக் கொண்டு இருக்கிறான். அந்நிலையில் வேட்டுவராசனும், அவன் பரிவாரங்களும் வருவதை, அங்கெழுந்த ஆரவாரத்தால் வள்ளி அறிந்து கொள்ளுகிறாள்; உடனே எங்காவது மறைந்து கொள்ளுமாறு முருகனை வேண்டுகிறாள்; துடிக்கிறாள்; பதைக்கிறாள். முருகன் அவ்விடத்தை விட்டு அகலுகிறான். ஆனால், வேட்டுவராசன் வரும் வழியில் அவனுக்கு எதிரில் தொண்டுகிழவனாகச் சிவனடியார் வடிவினைக் கொண்டு அவன் செல்லுகிறான். முதியவரைக் கண்டு அரசன் வணங்குகின்றான். ''இந்தக் கொடிய காட்டிற்கு இந்த நிலையில் ஏன் வந்தீர்? என வினவுகிறான். குறும்புக்கார வேலன்,

ஈண்டு நும்வரைக் குமரியெய்தி யினிதாட
வேண்டி வருகின்றனள் மெலிந்து கடிதென்றான்

என்பர் கச்சியப்பர். அந்த வேட்டுவ அரசனுடைய குன்றிலே உள்ள சுனைக்குக் குமரித் தீர்த்தம் என்பது பெயர். அரசன், 'கிழவர் அப்புனித தீர்த்தத்தில் நீராட வந்தனர் போலும்' என நினைக்கின்றான். ஆனால், முருகன் உள்ளத்தில் வேறோர் எண்ணம் அலைபாய்ந்து கொண்டிருந்தது. அதையே உட்பொருளாக வைத்து அவன் கூறினான் என்பர். 'உன் குமரியாகிய வள்ளியை மணம் புரிந்து இன்புற வந்தேன்' என மற்றொரு பொருள் பொதிந்து கிடப்பதை நயமிகு சொற்களால், பெரியவருடைய பண்பாட்டிற்கு மாசுண்டாகாதவாறு ஆசிரியர் உணர்த்துகின்றார். இவ்வாறு இருவகைப் பொருள் பயக்குமாறு சொற்களைப் புணர்த்தி அமைப்பது கவிதைக் கலையில் இவையாவும் ஆசிரியரின் கற்பனைத் திறனையும், கருத்துக்களை உணர்த்தும் கலைநயமிகு முறையையும் நமக்குப் புலப்படுத்துகின்றன.

# பிரபத்தி நெறியின் பெருமை

உலகிற் பிறந்து வாழ்கின்ற மக்கள் அனைவரும் இன்றியமையாமல் அறிந்து கொள்ள வேண்டிய பொருள்கள் மூன்று. அவை தத்துவம் இதம் புருடார்த்தம் எனப்படும். தத்துவம் என்பது அறிவுடைப் பொருள், அறிவில் பொருள், கடவுள் என்னும் முப்பொருள்களைப் பற்றிய உண்மைகளை உணர்ந்து கொள்ளுதல். இவற்றை முறையே சேதனம் அசேதனம் ஈசுவரன் என்றும், தத்துவத்திரயம் என்றும் வழங்குவர். சேதனம் என்பது உயிர். அசேதனம் என்பது உலகம். இவ்விரு பொருள்களையும் உடலாகக் கொண்டு நீக்கமற நிறைந்து நிற்பவனாகவும், எல்லோரையும் எல்லாவற்றையும் இயக்குபவனாகவும், காப்பவனாகவும் உள்ள பரம்பொருளே ஈசுவரன் எனப்படும். இறைவனை அடைந்த பின்பு பெறும் பேறு எதுவோ அதுவே, புருடார்த்தம் என்னும் உறுதிப் பொருளாகும். திருமாலே பரம்பொருள் என்றும், பிரபத்தியே திருமாலை அடைவதற்குரிய நெறி என்றும், ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதே சிறந்த பேறு என்றும், தெளிவாக அறிந்து கொள்ளுதல் இன்றியமையாதது என, வைணவப் பெரியோர்கள் கூறுவர்.

இறைவனை அடைதற்குரிய வழிகள் நான்கு என்று சமய நூல்கள் கூறும். சிறப்பாக, கண்ணபிரான் அருளிச் செய்த பகவத் கீதை என்னும் நூலுள் நான்கு வகையான யோக நெறிகள் கூறப்படுகின்றன. (1) கரும யோகம், (2) ஞான யோகம், (3) பக்தி யோகம், (4) பிரபத்தி யோகம். தவம் வேள்வி முதலியவற்றை, அவற்றின் பயன் கிடைக்கும் வரையில் மிகுந்த அன்புடன் இடையறாது முறைப்படி செய்து வருதல் கரும யோகம். பொறி புலன்களை வென்று மனத் தூய்மையுடனும், ஒருமைப்பாட்டுடனும் தியானத்தில் ஊன்றியிருத்தல் ஞான யோகம். இறைவன்பால் அயரா அன்பு கொண்டு தியானம் பூசனை தோத்திரம் வழிபாடு முதலியவற்றில் அழுந்தி நிற்றல் பக்தி யோகம். 'நான் ஒன்றையும் கடைப்பிடித்து ஒழுக வல்லமையில்லாதவன்; என்னைக் காத்தருள வேண்டிய பொறுப்பு நின்னையே சேரும். ஆதலால், உன் அருளை எதிர்பார்த்திருப்பதைத் தவிர என்னால் ஆவது ஒன்றுமில்லை' என்னும் திண்மையான உள்ளத்துடன் இறைவனுடைய திருவடித் தாமரையிலேயே தன்னை அடைக்கலமாக ஒப்படைத்து நிற்றல் பிரபத்தி யோகம் ஆகும். இதுவே சரணாகதி என்றும் வழங்கப் பெறும். வைணவப் பெருஞ் சான்றோர்களான ஆழ்வார்கள் ஆசாரியர்கள் யாவரும், வேறு உபாயங்களிலோ நெறிகளிலோ புகாமல் இந்தப் பிரபத்தி நெறியிலேயே மிகவும் ஈடுபட்டு நின்றார்கள். அது பற்றியே அவர்களைப் பிரபந்நர் என்றும், பிரபந்ந குலம் என்றும், வைணவ உலகம் போற்றி வருகின்றது.

இந்தப் பிரபத்தியானது கை கால் முதலிய உறுப்புக்களினால் செய்யப்படுவதன்று. உள்ளத்தில் கடைப்பிடிக்கும் ஒரு வகையான தெளிந்த உறுதியே பிரபத்தி எனப்படும். ''இறைவனே என் பேற்றுக்கு நீயே துணையாக வேண்டும்'' என்கிற நினைவே, பிரபத்தி அல்லது சரணாகதி எனப்படும். தன்னுடைய விருப்பம் வேறு எந்த உபாயத்தினாலும் நிறைவேறாது என்று தெரிந்து, உறுதியான நம்பிக்கையுடன் இறைவன் ஒருவனையே பற்றுக் கோடாகக் கொள்வது தான் பிரபத்தி ஆகும். மேற்கூறப் பெற்ற கருமயோகம் ஞானயோகம் பக்தியோகம் என்னும் உபாயங்களைக் கடைப்பிடிக்கத் திறமையற்றவர்கள்தான், இந்தப் பிரபத்தி நெறியைக் கைக்கொள்ள வேண்டும் என்பது சிலருடைய கொள்கை. அங்ஙனம் கொள்ளாமல், கரும யோகம் முதலியவற்றைக் கடைப்பிடித்து ஒழுகவல்ல ஆற்றல் வாய்ந்தவர்களாக இருந்தாலும், அவைகளை யெல்லாம் மேற்கொள்ளாமல், பிரபத்தி நெறியில்தான் ஈடுபட வேண்டும். அதுதான் சாலச் சிறந்த நெறி என்பது வைணவப் பெருஞ்சான்றோர்களின் தெளிந்த முடிவு ஆகும். இப் பிரபத்தி நெறியையே கடைப்பிடித்து ஒழுகியமையால்தான், வைணவப் பெருஞ் சான்றோர்களான, ஆழ்வார்களும் ஆசாரியர்களும் பிரபந்நர்கள் என்று பெரிதும் போற்றிச் சிறப்பிக்கப் பெறுகின்றனர்.

பிரபத்தி நெறிக்குத் தேசநியமம் கால நியமம் அதிகாரிநியமம், பிரகாரநியமம், பல நியமம் முதலிய ஒரு நியமமும் இல்லை. புண்ணியத்தலத்தில் செய்ய வேண்டும். வேறு இடத்தில் செய்தல் ஆகாது என்பது தேசநியமம், இளவேனில் முதலிய காலங்களிலே செய்ய வேண்டும், மற்ற காலங்களில் செய்தல் ஆகாது என்பது கால நியமம். இன்னின்ன தகுதியுடையோரே செய்தற்குரியர், பிறர் உரியர் அல்லர் என்பது அதிகாரி நியமம். நீராடிய பின்னரும் கை கால் முதலியன கழுவிய பின்னருமே செய்தற்குரியது. இங்ஙனமன்றிச் செய்தலாகாது, என்பது பிரகார நியமம். இன்ன பயனைத்தான் இது தரும், வேறு பயனைத் தரமாட்டாது என்பது பல நியமம். இத்தகைய நியமக் கட்டுப்பாடுகளெல்லாம் வேள்வி முதலிய கடமைகளைச் செய்வதற்கு ஏற்பட்டுள்ளன. ஆனால் பிரபத்தி நெறிக்கு இந்த நியமங்களில் எதுவும் விதிக்கப்படவில்லை.

விபீடணன் கடற்கரையிலே இராமபிரான் பால் அடைக்கலம் புகப் போந்தான். அப்போது ''இவன்இடமல்லாத இடத்திலே, காலமல்லாத காலத்திலே வந்திருக்கின்ருன். ஆதலால் இவன் ஐயப்படுதற்கு உரியவன்'' என்று, வானர சேனைத் தலைவர்கள் பலர் இராமபிரானிடம் கூறினர். அப்போது, அவர்களின் கூற்றை மறுத்து, ஆஞ்சநேயன் ''தூய கருத்தினனுகிய விபீடணன் அடைக்கலம் என்று கூறி வந்த இடத்திலும், காலத்திலும் நாம் குறை காண்டல் கூடாது. அவன் அடைக்கலமாக வந்து சேர்ந்ததுவே நல்ல இடமும், நல்ல காலமும் ஆகும்'' என்று கூறினுன். இதனுல் பிரபத்தி நெறிக்குத் தேசநியமம் காலநியமம் இல்லை என்பதைத் தெளியலாம்.

திரௌபதியானவள், துச்சாதனனுல் பற்றி இழுக்கப்பட்டுச் சபையில் கொணரப் பெற்ற போது, அவள் பூப்பெய்திய நிலையில் இருந்தாள். தூய்மையற்ற அந்நிலையிலேயே அவள் 'கோவிந்தனே, தாமரைக் கண்ணனே! நான் உன்னை அடைக்கலம் புகுகின்றேன். என்னைக் காப்பாற்றுக' என்று அரற்றிப் புலம்பிக் கண்ணபிரானை நோக்கிப் பிரபத்தி செய்தாள். நீராடித் தூய்மையுற்று, அதன்பின் அவள் கோவிந்தா என்று கூவி அடைக்கலம் புக நினைத்திலள். அதற்காகக் கண்ணபிரானும் அவளைப் புறக்கணித்திலன். அப்போதே அவளுக்கு அருள் செய்து அவளைக் காப்பாற்றினுன். இதனுல் பிரபத்தி நெறியைக் கடைப்பிடித்து ஒழுகத் தலைப்படுபவர்களுக்கு அதிகாரி நியமமும், பிரகார நியமமும் பிறவும் இல்லை என்பது புலப்படுதல் காணலாம்.

அருச்சுனன், கண்ணபிரானிடத்தில் கொடியோர் பலர் சூழ நின்ற போர்க்களத்திலேயே, கீதோபதேசம் கேட்டு உணர்ந்தான். இதனுலும் பிரபந்த நெறிக்கு இடமும் நேரமும் சூழ்நிலையுமாகிய நியமங்கள் எதுவும் இல்லை என்பது, தெளியலாம். இவற்ருல் தெளியப்படுவது யாதெனில், பிரபத்தி நெறியைப் பற்றிக் கேட்டுணரும் பொழுதும், கடைப்பிடித்தொழுகும் போதும், விபீடணனும் திரௌபதியும் அருச்சுனனும் தத்தம் நிலையிலேயே தகுதியும் உரிமையும் பெற்ருற்போல, பிரபத்தி நெறியில் ஈடுபட முற்படுங்கால், தூய்மையில்லாதார் தூய்மை தேட வேண்டுவதில்லை ; காலமும் இடமும் சூழ்நிலையும் கருத வேண்டுவதில்லை ; அந்நெறியில் விருப்பமும் பற்றும் உறுதியும் ஏற்பட்டால் அதுவே எல்லாத் தகுதிகளையும் உரிமைகளையும் வழங்க வல்லது என்பதாகும்.

இனி, இப்பிரபத்தி நெறிக்கு இன்னுர்தான் உரியர் என்ற அதிகாரி நியமமும் இல்லை. ஆடவரான பஞ்ச பாண்டவர்களும், பெண் மகள் ஆன திரௌபதியும், செய்யத் தகாத பெருங் குற்றத்தைச் செய்த காகாசுரனும், கொடிய நஞ்சை உடைய காளியன் என்னும் அரவும், விலங்காகப் பிறந்திருந்தாலும் அன்பில் மிக்க கசேந்திரனும், இராக்கதனுகிய விபீடணனும், இராமபிரானும் இளைய பெருமாளும் முதலியவர்கள் எல்லோரும், அடைக்கலம் புகுந்து சரணுகதி என்னும் இப்பிரபத்தி நெறியில் ஒழுகினர். ஆதலால் இதற்கு இன்னுர்தான் உரியவர் என்னும் நியமம் இல்லை. விருப்பமுடையார் எல்லோரும் இந்நெறிக்கு உரியவரே யாவர். மேற்கூறிய பஞ்ச பாண்டவர் முதலானேர் அனைவரும், தாம் தாம் விரும்பிய பயனை அடைந்ததனுல், பிரபத்தி நெறிக்குப் பல நியமம் என்பதும் இல்லை எனத் தெளியலாம். விரும்பிய எல்லாப் பயன்களையும் தரவல்லது இந்தச் சிறந்த பிரபத்தி நெறி.

இங்ஙனம் பிரபத்தி நெறிக்கு நியமங்கள் ஆகிய கட்டுப்பாடுகள் ஒன்றும் இல்லையாயினும், பொருள் நியமம் என்பது ஒன்று மட்டும் உண்டு. அஃதாவது, குறைவிலா நிறைவாய் விளங்கும் முழு முதற் பரம்பொருள் ஒருவன் திறத்திலேயே, இப்பிரபத்தி நெறியைக் கடைப்பிடித்து ஒழுகி, அடைக்கலம் புகுதல் வேண்டும். இறைவன் அல்லாத பிறர்பால் பிரபத்தி செய்தல் ஆகாது என்கின்ற பொருள் நியமம் ஒன்று மட்டுமே, பிரபத்தி நெறிக்கு உண்டு.

இத்துணைப் பெருஞ் சிறப்புடைய பிரபத்தி நெறியையே, ஒரு தலைக்கீடாகக் கொண்டு, இறைவன் உயிர்களைக் காத்தருள்கின்ருன். ஆதலின், நம்மைக் காத்தருள வல்லவன் என்கிற திடமான நம்பிக்கை கொள்ளுதலே, நம் ஒவ்வொருவர்க்கும் தஞ்சமும், உய்யும் நெறியும் ஆகும்.

''அகல கில்லேன் இறையும் என்
றலர்மேல் மங்கை யுறைமார்பா,
நிகரில் புகழாய்! உலகமூன்
றுடையாய்! என்னை ஆள்வானே,
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே,
புகலொன் றில்லா அடியேனுன்
அடிக்கீ ழமர்ந்து புகுந்தேனே.

—நம்மாழ்வார்.

படைக்கல மாக உன் நாமத்து
எழுத்தஞ்சென் நாவிற் கொண்டேன்;
இடைக்கம் அல்லேன்; எழுபிறப்பும்
உனக்கு ஆட் செய்கின்றேன்;

துடைக்கினும்போகேன்; தொழுது
வணங்கித் தூநீறு அணிந்துன்
அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச்
சிற்றம்பலத்து அரனே.

—நாவுக்கரசர்.

# நம்மாழ்வார் செய்யும் விண்ணப்பம்

முன்னுரை :

எம்பெருமான் ஆழ்வார்க்கு மயர்வற மதி நலம் அருளினன். அதுகொண்டு ஆழ்வார் தம்முடைய ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்குகின்றார். நோக்க நோக்க, அவனைப் பிரிவறக் கலந்து அநுபவிக்கப் பெற வேண்டும் என்னும் ஆராக் காதல், அவர்க்கு மிகுதிப்படுகின்றது. ஆனால் அத்தகைய இனிய அநுபவத்திற்குத் தடைகள் மூன்று இருத்தலை அவர் உணர்கின்றார்.

*(1)* அவைகளுள் முதலாவது தடை, பொய்ந்நின்ற ஞானம்; அதாவது தத்துவ ஞானத்திற்கு மாறான விபரீத ஞானம். நல்வினை தீவினைகள் உண்டு, சுவர்க்க நரகங்கள் உண்டு. இம்மை மறுமை உண்டு, இறைவன் உண்டு என்று உணரப் பெறுவது த்தத்துவஞானம். நல்வினை தீவினைகள் இல்லை, இறைவன் இல்லை என்று பிறழ உணர்ந்து துணிந்து கூறுவது விபரீத ஞானம். தத்துவ ஞானம் மெய்யுணர்வு என்றும், விபரீத ஞானம் திரிபுணர்வு என்றும் கூறப்பெறும்.

*(2)*இரண்டாவது தடை, பொல்லா ஒழுக்கம். இறைவன் ஒருவன் உளன் என உணர்ந்து, ''யானே நீ என்னுடைமையும் நீயே'' என அவனை வழிபட்டு ஒழுகுதல், நல்லொழுக்கு. அதற்கு மாறாக, இறையுணர்வு என்பது சிறிதும் இன்றி, யான் என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும் ஆகிய அகங்கார மமகாரங்கள் மேலிட்டு, அவற்றின் வழியே இறைவனை மறந்து ஊனே உடையே உகந்து ஓடியுழலுதல், பொல்லா ஒழுக்கம்.

*(3)* மூன்றாவது தடை, அழுக்கு உடம்பு. பொய்ந்நின்ற ஞானத்திற்கும், பொல்லா ஒழுக்கத்திற்கும் அடிப்படைக் காரணமாக அமைந்திருப்பது அசுத்தமான நோக்கத்துடன் கூடியிருக்கும் சம்பந்தமேயாகும். உடம்பு அழுக்கினின்று பிறந்தது; அழுக்குகளை யுடையது ; அழுக்குகள் சேர்வதற்குக் காரணமாக இருப்பது. இறைவன் பாற் பிரிவறக் கலந்து கூடி இன்புறுவதற்கு அழுக்குடம்பும், பொல்லா ஒழுக்கமும், பொய்ந்நின்ற ஞானமும் ஆகிய இம்மூன்றும் பெரிய தடைகளாக இருக்கின்றன.

இம்மூன்றினாலுமே, எல்லாத் துன்பங்களுக்கும் நிலைக்களமான கொடிய பிறவித் துன்பம் ஏற்படுகின்றது. இதுகாறும் எத்தனையோ பிறவிகளை எடுத்து எடுத்துத் துன்புற்றாயிற்று. இனிமேலும் பிறவி எடுத்து வருந்துதல் கூடாது என்று கருதி, ஆழ்வார் எம்பெருமான்பால் மிகவும் பணிவுடன் விண்ணப்பம் செய்து கொள்ளுகின்றார்!

**உயிர் அளிப்பான் பிறந்தாய் :**

தமது விண்ணப்பத்தைப் பெருமாள் செவி சாய்த்துக் கேட்டருளற்பொருட்டு, ஆழ்வார் அவனைப் புகழ்ந்து பாராட்டிப் பேசுகின்றார் ! எண்ணில்லாத பலப்பல குணநலங்களை யுடையவன் எம்பெருமான். ஆயினும் அவைகளுள் மிக மிகத் தலைசிறந்த குணநலங்கள் இரண்டு. அவையாவன முறையே சௌலப்பியம் (எளிமைத்தன்மை) ; பரத்துவம் (ஒப்புயர்வற்ற மேன்மைத் தன்மை). அவைகள் இரண்டையும் இங்கே குறிப்பிட்டு, ஆழ்வார் பேசுகின்றார்.

இறைவன் எப்போதும் மூன்று செயல்களைச் செய்தலில், குறியாக இருக்கின்றான். நல்லவர்களைப் பாதுகாத்தல்; கொடியவர்களை அழித்தொழித்தல், அறத்தை நிலைநாட்டுதல் என்பனவே, அம்மூன்று செயல்கள். இவற்றுள் நல்லவர்களைப் பாதுகாத்தலைத்தான், இறைவன் மிகவும் முதன்மையாகக் கருதுகின்றான். இந்த ஒன்றில் ஏனைய இரண்டும் அடங்கிவிடும். ஆதலின் நல்லவர்களைப் பாதுகாப்பதற்கென்றே, அவன் 'மீன் ஆமை கேழல்' முதலிய பல வடிவங்களில் வந்து திருவவதரித்தான். நம்மைப் போல வினைவயப்பட்டு அவன் பிறக்கவில்லை. நல்லவர்களைப் பாதுகாக்க விரும்பித் தானே தன் கருத்தின்படி அருள் வயத்தாற் பிறந்தான். அங்ஙனம் பல பிறவிகளில் பல வடிவுகளில் வந்து பிறந்தான். அந்தந்தப் பிறவிகளில் பிறந்தபோது, சிறிதும் வேறுபாடு தோன்றாதபடி, அதனதன் தன்மையாகவே இருந்தான். இங்ஙனமெல்லாம் அவன் செய்தருளியது, உயிர்த் தொகுதிகளைக் காத்தருளுதல் வேண்டும் என்னும் அவனது ஒப்பற்ற அருளியல்பினாலேயே யாகும். ஆதலின், ''உயிர் அளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்'' என்று ஆழ்வார் இறைவனின் எளிமைத் தன்மையைப் புகழ்ந்தார்.

**இமையோர் தலைவர் :**

இறைவன் எளியவன் மட்டும் அல்லன் ; மிக மிக அரியவனும் ஆவான். அரியவனாதல் தான், அவனது இயற்கையியல்பு. அதுதான் மேன்மை அல்லது பரத்துவம் எனப்படும். எம்பெருமான், விண்ணுலகில் உள்ள இந்திரன்

முதலிய தேவர்களுக்கெல்லாம் தலைவனாகத் திகழ்கின்றான். அம்மட்டோ! வைகுந்தம் ஆகிய பரமபத உலகில் உள்ள நித்திய முக்தர்கள் எல்லோருக்கும் கூட, அவன் தலைவனாக விளங்குகின்றான். இவ்விருவர்க்கும் ஒரு சேரத் தலைமை நிலைபெற்று விளங்குதல் பற்றி, 'இமையோர் தலைவா' என்று இனிது புகழ்ந்து, இறைவனை விளிக்கின்றார் ஆழ்வார்.

பொய்ந்நின்ற ஞானமும், பொல்லா
ஒழுக்கும், அழுக்குடம்பும்,
இந்நின்ற நீர்மை இனியாம்
உறாமை, உயிர் அளிப்பான்
எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்!
இமையோர் தலைவா!
மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன்
செய்யும் விண்ணப்பமே!

இங்ஙனம் இறைவனை விளித்து, நின்பால் யான் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ள வந்துள்ளேன் ; இதனைச் சிறிது நின்று கேட்டருளல் வேண்டும் என்கின்றார் ஆழ்வார்!

**நுண்பொருட் குறிப்புகள் :**

இவ்வினிய சிறந்த பாடலின்கண் உள்ள, ஒவ்வொரு சொல்லும் சொற்றொடரும் மிக நுண்ணிய சிறந்த கருத்துக்கள் செறிந்து காணப் படுகின்றன. சிந்திக்குந்தோறும் இவைகள் சிந்தனைக்கு விருந்தாய்ச் சிறந்து திகழ்கின்றன. ஈண்டுச் சில கருத்துக்கள் மிகவும் சிறப்புடையனவாக விதந்து குறிப்பிடத் தக்கவையாகும்.

*(1)* நாம் பிறவிகளைப் பெறுதற்கும், இறைவனோடு கூடாமற் பிரிந்திருப்பதற்கும், பொய்ந்நின்ற ஞானம்—பொல்லா ஒழுக்கம் — அழுக்குடம்பு ஆகிய மூன்றுமே முதன்மையான காரணங்கள்.

*(2)* தண்டகாரணியத்தில் முனிவர்கள் இராமபிரானிடம் சென்று, 'இஃது ஒரு வெட்டு, இஃது ஒரு குத்து, இதைப்பார், இதனைக்காண்' என்று, அரக்கர்கள் தமக்குச் செய்த கொடுமைகளைக் கூறித் தம் உடம்பைக் காட்டினாற்போல, ஆழ்வார் எம்பெருமான்பால் தமது ஆத்மாவைக் காட்டி, பொய்ந்நின்ற ஞானம் முதலிய மூன்றையும் சுட்டி, 'இந்நின்ற நீர்மை' என்கின்றார் என்று, ஆளவந்தார் அருளிச் செய்வராம்.

*(3)* 'அடியேன் செய்யும் விண்ணப்பம்' என்று குறிப்பிடும் ஆழ்வார், அதற்கு ஏற்ப 'யான் உறாமை' என ஒருமையிற் கூறாமல், 'யாம் உறாமை' எனப் பன்மையிற் கூறுகின்றார். இஃது ஆழ்வாரின் தன்னலம் அற்ற பரநல உணர்வைப் புலப்படுத்துவதாகும். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதே பெரியோர் இயல்பாதலை, இதனால் நாம் இனிதுணரலாம்.

இச்சொற்றொடர்க்கு 'வியாக்கியானச் சக்கரவர்த்தி' ஆகிய பெரியவாச்சான் பிள்ளை அவர்கள், ''பிறர்படும் துன்பம் (பராநர்த்தம்) நெஞ்சிற்படுகையாலே நாட்டுக்காகத் தாம் மன்றாடுகின்றார்'' என்று எழுதியுள்ள சிறப்புரை அறிந்து மகிழற்பாலது.

*(4)* ''பிறவாப் பிறப்பில்லை பிறப்பித்தோரில்லையே' எனவும், 'பிறப்பில் பல்பிறவிப் பெருமான்' எனவும் புகழ்ந்தோதப்படும் சிறப்பினனாதலின், இறைவனை 'எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்' என்றார்.

*(5)* கீதையிற்கண்ணபிரான்' நல்லவர்களைப் பாதுகாப்பதன் பொருட்டு வந்து பிறக்கின்றேன்' என்று அருளிச் செய்திருத்தலின், இங்ஙனம் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தமைக்குக் காரணம் கூறுவார், 'உயிர் அளிப்பான் பிறந்தாய்' என்றார்.

*(6)* 'இமையோர்' என்றது கண்களை இமைக்காதவர்கள் என்னும் பொருளில் விண்ணுலகத்தில் உள்ள தேவர்களையும், அகநோக்காகிய ஞானக்கண்களைக் குவியாதவர்கள் என்னும் பொருளில், வைகுந்தத்தில் உள்ள நித்ய முக்தர்களையும் ஒரு சேரக் குறிக்கும்.

*(7)* 'இமையோர் தலைவா' என்றது உத்தம புருஷத் தன்மையை உணர்ந்து நினைந்தபடி. இது தென்னத்தியூர் என்னும் காஞ்சிபுரத்தில் உள்ள தேவாதிராசன் ஆகிய பேரருளாளப் பெருமாளையே குறிக்கும். திருவாய்மொழியின் முதற் பாடலிலும் 'அமரர்கள் அதிபதி' என்று ஆழ்வார் இவரையே சுட்டியருளினர்.

*(8)* 'மெய்ந்நின்று' என்பதில் உள்ள 'மெய்' என்பதனை 'விண்ணப்பம்' என்பதனோடு இயைக்கலாம். அங்ஙனம் இன்றி, ''உனது திருமேனியைக்காட்டி என்முன் நேரிலே நின்று'' எனவும் பொருள் கொள்ளலாம்.

*(9)* இனி 'நின்று' என்பதனைக் 'கேட்டு' என்பதனோடு கூட்டி, 'நின்று கேட்டு' எனவும் ஒரு தொடராக்கிப் பொருள்கொள்ளலாம். ''பெருமாள் திருவீதிப் புறப்பாடுகளில் வேத பாராயணம் கேட்க நிற்பதில்லை. அருளிச்செயல் இயல் கேட்க நிற்பதுண்டு; ஆழ்வார் இங்ஙனே நின்று கேட்டருளாய்' என்று பிரார்த்தித்ததனாலன்றோ இது'' என்று அழகிய மணவாளச்சீயர் சுவாமிகள், இதற்கு நயவுரை அருளிச் செய்வராம்.

*(10)* ''கேட்டருளாய்'' என்னும் தொடரைக் 'கேட்டு அருளாய்' எனப் பிரிப்பர் சிலர். 'கேட்டுவிட்டு, அதன் பின்னர் அருள் செய்க' என்பது அவர் கருதும் பொருள். அஃது ஆழ்வார் கருத்துக்கு ஏற்புடையதன்று. 'கேட்டருள்வாய்' என்பது 'நன்னயம் செய்துவிடல்' (314) என்புழிப் போல் அன்றி, 'அடங்காமை ஆரிருள் உய்த்துவிடும்' (121) என்புழிப் போல ஒரு சொல் நீர்மையது. 'செவிமடுத்துக் கேட்டல் ஆகிய அருளைச் செய்வாய்' என்பது பொருள். செவிமடுத்துக் கேட்டுத் திருவுள்ளத்திற் கொண்டால், இறைவன் அருள் செய்யாதிரான் என்பது கருத்து. ✻

# சிலப்பதிகாரம்

'சிலம்புச் செல்வர்'
(திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்)

சேரநாட்டின் இளவரசரும், நிமித்திகன் கூற்றால் தமக்கு வரவிருந்த அரசைத் துறந்தவருமான இளங்கோவடிகள், கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சிலப்பதிகாரக் காப்பியத்தைப் படைத்ததாக ஆராய்ச்சியாளர்களில் பெரும்பாலோர் அறிவிக்கின்றனர். இந்தக் காப்பியம் சங்க காலத்தை யொட்டிப் பிறந்த இலக்கியமாகக் கருதப்படுகிறது. தமிழில் தோன்றிய தலைக்காப்பியம் என்பதிலும் ஐயமில்லை. தமிழினத்தின் வரலாற்று இலக்கியமாகவும் இருந்து வருகின்றது. தமிழ் இனவுணர்ச்சியையும், தமிழ்நாட்டுப் பற்றையும் வெளிப்படுத்தும் இலக்கியங்களிலே தலையானது என்றும் இதனைச் சொல்லலாம்.

தமிழ்க் காப்பிய உலகிலே சிலப்பதிகாரத்திற்குள்ள இடம் யாது? அதனை, ''முடிமன்னர் மூவர்க்கும் உரியது'' என்று கூறுவார் பதிக ஆசிரியர். ''முத்தமிழ் நாடகக் காப்பியம்'' என்பர் தற்காலப் புலவர்கள். ஆசிரியர் இளங்கோவடிகள் சமணச் சார்புடையவர் எனக் கருதி, சமணக் காப்பியமெனச் சாதிப்போருமுண்டு. காப்பியத் தலைவியாம் கண்ணகியை நினைவில் கொண்டு ''பத்தினிக் காப்பியம்'' என்று பகர்வோருமுண்டு-உண்மையில், அது, தமிழினத்தின் தேசியக் காப்பியமாகும்.

தேசியக் காப்பியம் என்று கொள்வது, இளங்கோவின் சமயம் சமணம் என்பதை மறுப்பதாகாது. அவர், சமயத்தால் சமணராகவே இருப்பினும், இனத்தால் தமிழராதலால், அவர் படைத்த சிலப்பதிகாரம் தமிழினத்தின் தேசியக் காப்பியமாவதற்கு சமயம் தடையாக இருக்கவில்லை.

சிலப்பதிகாரம் தமிழினத்தின் தேசியக் காப்பியம் என்பதை ஏற்பது, அது, 'முடியுடை வேந்தர் மூவர்க்கும் உரியது' என்ற பதிகத்தின் முடிவுடன் மாறுபடுவதாகாது. முடியுடை வேந்தர் மூவருமே இனத்தால் தமிழராதலால், அவர்கள் பெருமை பேசும் சிலப்பதிகாரம் தேசியக் காப்பியம் என்ற ஆராய்ச்சி முடிவும் அங்கீகரிக்கப்பட வேண்டியதாகிறது.

சிலப்பதிகாரத்தைத் தமிழினத்தின் தேசியக் காப்பியமாக ஏற்பது, அது, பத்தினிக் காப்பியம் என்ற முடிவோடு முரண்படுவதாகாது. ஏனெனில், சிலப்பதிகாரக் காப்பியத் தலைவியான கண்ணகி இனத்தால் தமிழ்மகளாதலால், அவளது வழிபாட்டை வற்புறுத்தும் காப்பியத்தைத் தமிழினத்தின் தேசியக் காப்பியமாகக் கொள்வது பொருத்தமானதே. எப்படிப் பார்த்தாலும் புலவருலகமும் சமய உலகமும் ஏற்கத் தக்க ஒன்றாகவே தமிழினத்தின் தேசியக் காப்பியம் என்ற ஆராய்ச்சி முடிவு அமைந்திருக்கக் காண்கின்றோம்.

கவிஞர்கள் காலத்தின் தேவையை நிறைவு செய்யவே காப்பியங்கள் படைக்கின்றனர். இது, யாரும் மறுக்க முடியாத உண்மை. அந்த வகையில் இளங்கோ வடிகளும் தம் காலத்தில் தமிழினத்திற்குத் தேவைப்பட்ட ஒன்றை வழங்கவே சிலப்பதிகாரம் செய்தார். அவர் காலத்தில் தமிழினத்தின் தேவை எதுவாக இருந்தது? ஒருமைப்பாடுதானே! ஆம் ஒருமைப்பாடு என்றால், எந்த மட்டத்தில்?

சேர-சோழ-பாண்டியர் எனப்பட்ட தமிழ் மூவேந்தரின் ஒருமைப்பாடா? ஆம் அதுவுந்தான்!

அரசர்- அந்தணர்- வணிகர்- வேளாளர் ஆகிய நால்வருணத்தவர் ஒருமைப்பாடா? ஆம் அதுவுந்தான்!

சைவர்- வைணவர்- சமணர்- பௌத்தர் ஆகிய அகச் சமயத்தவர், புறச் சமயத்தவர் ஒருமைப்பாடா? ஆம்; அதுவுந்தான்!.

நிலவழிபட்ட இந்திய தேசிய ஒருமைப்பாடா? ஆம், அதுவுந்தான்!

இத்தனை ஒருமைப்பாடுகளையும் மொழிவழிப்பட்ட தமிழ் இனத்தின் ஒருமைப்பாட்டின் மூலந்தான் சாதிக்க முடியுமென்று இளங்கோ வடிகள் கருதினார். அதனாற்றான்-சாதி-சமய-வருண-குல-மண்டலவேற்றுமைகளுக்கு அப்பாற்பட்ட அவ்வேற்றுமைகளிடையே ஒற்றுமை காண்கின்ற தமிழர் இன ஒருமைப்பாட்டை வலியுறுத்திச் சிலப்பதிகாரக் காப்பியத்தைப் படைத்தார். இதுவே, சிலம்பின் கருப்பொருளுமாகும்.

பாண்டியன் நெடுஞ்செழியன் தன் அவையில் நிற்கும் கண்ணகியாளை நோக்கி, ''நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய், யாரையோ நீ மடக் கொடியோய்?'' என்று கேட்டபோது,

''எள்ளறு சிறப்பின்
இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண்
தீர்த்தோன்; அன்றியும்,

வாயிற் கடைமணி
நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர்
நெஞ்சுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை
ஆழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப் புகார்என்
பதியே . . .''

என்று கண்ணகி கூறுகிறாள். ஆம்; பாண்டிய நாட்டுக்கு அயலாள் என்று தன்னை அறிமுகப் படுத்திக் கொள்ளுகிறாள்.

சேரமுனி இளங்கோ, சமயத்தால் சமணர் எனப்படுகிறார் என்றாலும், அவர் சமயத்தைவிடவும் இனத்திற்கே வாழ்க்கையில் முதன்மை தந்தார். சமயத்தைத் தனி மனிதருக்குரியதாகவே அடிகள் கருதினார். சிலம்பில் அவர் அறிமுகப்படுத்துவது சமயச் சார்பற்ற அரசேயாகும். அரசு மதவழிப்பட்டதாக இருப்பதை அவர் வெறுத்தார். சங்க காலத் தமிழகத்தில் நிலவியவை சமயச் சார்பற்ற அரசுகளேயாகும்.

ஒரு குடும்பத்தில் இருவேறு மதத்தினர் இருக்க முடியுமென்பதனைச் சிலப்பதிகாரப் பாத்திரங்கள் வாயிலாக அறிவித்துள்ளார். ஆம், இளங்கோவடிகள் சமண சமயத்தைச் சார்ந்தவரென்றால், அவரது அண்ணன் செங்குட்டுவன் தூய சைவன் என்று கூறுகின்றது சிலப்பதிகாரம்.

கண்ணகி-கோவலன் வாழ்வு முடிந்தது கேட்டு அதிர்ச்சியுற்ற அவர்கள் தந்தையரான மாநாய்கனும், மாசாத்துவானும் முறையே சமணப் பள்ளியையும் பௌத்த மடத்தையும் சார்ந்தனர் என்று இளங்கோ அறிவிக்கிறார்.

இளங்கோ காலத்துக்கு முன்பு குமரிக் கண்டம் என்பதாக ஒரு பகுதி தமிழகத்தோடு இணைந்திருந்ததாம். அதிலே, பஃறுளியாறு இருந்ததாம். பல மலைத் தொடர்களும் இருந்தனவாம். அந்தப் பகுதியைக் கடல் விழுங்கி விட்டதென்று இளங்கோ தகவல் தருகிறார். கடல்கொண்ட குமரிக் கண்டம் பாண்டிய ராட்சிப் பிரதேசமாம்! முன் எப்போதோ வடிவலம்ப நின்ற பாண்டியன் என்பான், தன் ஆற்றலைப் பிறவேந்தர்களுக்கு உணர்த்தத் தன் வேலைக் கடல்மீது எறிந்தானும். அதனால் சினங்கொண்ட கடலானது பொங்கியெழுந்து குமரிக் கண்டத்தை விழுங்கிப் பழி தீர்த்து விட்டதாம்! இதனை,

''வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள''

(சிலம்பு ; 11 : 18 : 20)

என்ற வரிகளால் அறிகிறோம். இதற்கு,

''முன்னொரு காலத்துத் தனது பெருமையின தளவை அரசர்க்குக் காலான் மதித்துணர்த்தி வேலானெறிந்த அந்தப் பழம் பகையினைக் கடல் பொறாது பின்னொரு காலத்து அவனது தென்றிசைக் கண்ணதாகிய பஃறுளியாற்றுடனே பலவாகிய பக்க மலைகளையுடைய குமரிக் கோட்டத்தையும் கொண்டது . . .''

என்று விளக்கந் தருகிறார் அடியார்க்கு நல்லார்.

இந்தச் செய்தியைச் சொல்லுகிற அடிகளார், தமிழ் நிலத்தைக் கொண்டதே யென்ற கோபத்தால், ''கொடுங்கடல்'' என்று கூறுகின்றார். இதுவன்றோ இனவுணர்ச்சி! அரசைத் துறந்து, அரண்மனை வாழ்வைத் துறந்து, குணவாயில் கோட்டத்தில் தங்கித் துறவியாகவாழ்ந்த அடிகளாலேயே தமிழ் இனப்பற்றைத் துறக்க முடியவில்லை. அது, துறவியாலுந் துறக்கக் கூடாத தென்று அவர் கருதினர் போலும்.

தமிழகத்தின் ஒரு பகுதியைக் கடல் கொண்டாலும், அந்த இழப்புக்கு ஈடுசெய்ய வடபுலத்திலுள்ள கங்கையாற்றையும் இமய மலையையும் கைப்பற்றினானும் பாண்டியன். இதனை,

''வடதிசைக் கங்கையும் இயமமும் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி''

என்ற வரிகளிலே அடிகள் அறிவிக்கின்றார்.

ஆம்; தென்னகத்தார் இழந்த பகுதியை நினைந்து ''இக்கொடுங் கடல் கொண்டதே'' என்று ஏங்கிய அடிகள், அவற்றிற்கு ஈடாக வடபுலத்துக் கங்கையாற்றினையும், இமயமலையினையும் கைப்பற்றிய திறத்தைக் கூறிப்பாண்டியனை வாழ்த்தி ஆறுதல் அடைகின்றார். இந்தச் செய்தியை அடிகள் மாங்காட்டு மறையவன் வாயிலாகத்தான் கூறுகின்றார் என்றாலும், அவரது வாக்காகவும் கொள்ளலாந்தானே!

தமிழினத்தை ஒன்றுபடுத்துவதற்காகவே கண்ணகியை-காப்பிய நாயகியை-தெய்வமாக்குகின்றார். ஒவ்வொரு சமயத்தவரும் ஒவ்வொரு மூர்த்தியை வழிபடு தெய்வமாகக் கொண்டிருந்த காலமது. ஆம் ; சைவருக்குச் சிவனும், வைணவருக்குத் திருமாலும், சமணருக்கு அருகரும் பௌத்தருக்குப் புத்தரும் வழிபடு மூர்த்திகளாவர். ஆகவே, மூர்த்தி வழிபாடுகளால்-அதாவது, மதவேறுபாடுகளால் பிளவுபட்டு, பரஸ்பரம் பிணக்கும் கொண்டிருந்த சமயங்களைச் சார்ந்த தமிழரையெல்லாம் ஒன்றுபடுத்தக் கற்பு நெறிக்கொரு தெய்வமாகக் கண்ணகியை அறிமுகப்படுத்துகின்றார். இனவுணர்ச்சியினும் அரசியல் குலவுணர்ச்சிக்கே முதன்மையளித்து, பரஸ்பரம் பகைகொண்டு, அடிக்கடி போர்புரிந்து வந்த மூவேந்தர்களை வஞ்சியில் நடைபெறும் கண்ணகி வழிபாட்டில் கலந்து கொள்ளச் செய்கிறார்.

தமிழ் இன ஒருமைப்பாட்டின் அடிப்படையில் இந்தியதேசிய ஒருமைப்பாட்டுக்கும் இளங்கோ வழி வகுத்தார். ஆம், வஞ்சியில் நடைபெறும் கண்ணகித் தெய்வ வழிபாட்டிலே சிங்களவனான இலங்கைமன்னன் கயவாகு, தமிழரல்லாதாரான நூற்றுவர் கன்னர், தமிழர் பகைவரான வடஆரிய மன்னர் ஆகியோரும் கலந்து கொள்ளச் செய்து, இலங்கையுள்ளிட்ட இந்திய உபகண்டத்தில் ஒரு கலாசார ஐக்கியம் உருவாகவும் தமிழர் கடமைப்பட்டிருப்பதனை ஆசிரியர் இளங்கோ எடுத்துக் காட்டினர். **

# குறுந்தொகை போற்றும் பெருந்தகை முருகன்

## முன்னுரை:

தமிழ் நூற் பயிற்சி ஓரளவாயினும் உடையவர்கள் அனைவரும், யாப்பருங்கலக் காரிகை என்னும் இலக்கண நூலைப் பற்றி அறிந்திருப்பர். அகவற்பா வெண்பா கலிப்பா வஞ்சிப்பா என்னும் தமிழ்ச் செய்யுட்களுக்கு உரிய இலக்கணங்களை விளக்குவது. இந்நூல்! 'காரிகை கற்றுக் கவிபாடுதலில் பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்றே' எனவும், 'காடும் செடியும் அன்றே தமிழ்க் காரிகை கற்றதுவே' எனவும் பிறவாறும் வழங்கும் பழமொழிகள், யாப்பருங் கலக்காரிகை என்னும் செய்யுள் இலக்கண நூலின் சிறப்பினையும், தமிழ் மக்களிடையே அது மிகவும் போற்றி மதித்துப் பயிலப் பெற்று வரும் மாட்சிமையினையும், நன்கினிது உணர்த்தும்.

## குணசாகரர்:

இந் நூலினை இயற்றிய ஆசிரியர் அமித சாகரர் என்பவராவர். அவர்தம் காலம் கி.பி. 10ஆம் நூற்றுண்டு ; அஃதாவது இற்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே என்பர். இந் நூலுக்கு உரை எழுதியவர் குணசாகரர் என்பவர். இவர் அமிதசாகரரின் மாணவராக, அவர் தம் சம காலத்தவராக வாழ்ந்திருந்தவர் எனக் கொள்ளுதல் கூடும். இக் குணசாகரர் தாம் வரைந்த யாப்பருங்கலக் காரிகை உரையின் இறுதியில், ஒழிபியல் என்னும் பகுதியின் முடிவில், செய்யுட்களில் வருவதற்குரியன அல்லாத எழுத்துக் குற்றம், சொற் குற்றம், பொருட் குற்றம், யாப்புக் குற்றம், அலங்காரக் குற்றம், ஆனந்தக் குற்றம் என்பனவற்றைப் பற்றி விளக்குகின்றார். விளக்கிவிட்டு, அக்குற்றங்கள் ஒன்றும் இல்லாத சிறந்த பாடல் ஒன்றை மேற்கோள் காட்டுகின்றார்.

''தாமரை புரையும் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழ்ஒளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே''

என வரும் அழகிய பாடல், எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுட்கு மேற்கோளாகக் குணசாகரரால் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது.

## முருகன் துதி :

இப் பாடல், குறுந்தொகை என்னும் சங்க நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல் ஆகப், பாரதம் பாடிய பெருந்தேவனர் என்னும் பழம் பெரும் புலவராற் பாடப் பெற்றதாகும். இப் பாடல் தமிழ்க் கடவுள் ஆகிய முருகனைப் பற்றிய துதியாக அமைந்திருக்கின்றது. முருகனைப் பற்றிய இத்துதிப் பாடல், சமண சமயத்தைச் சார்ந்தவர் என்று கருதப்படும் முனிவர் ஆகிய குணசாகரரால், யாப்பருங்கலக்காரிகை என்னும் தமது செய்யுள் இலக்கண நூலில், எல்லாக் குற்றமும் தீர்ந்த இனிய சிறந்த செய்யுளாக எடுத்துக் காட்டப் பெற்றிருப்பது, இப்பாடலின் இணையற்ற மாட்சிமையினை எழிலுற விளக்கும் சான்றாக அமையும். ஆதலின் இச் சிறந்த பாடலின் பொருள் நலத்தினை, ஈண்டு இயன்ற அளவு ஒரு சிறிது காண்போம்.

## பாடலின் பொருள்:

''தாமரை மலரைப் போன்ற அழகிய சிவந்த திருவடிகளையும், பவழத்தை ஒத்த திருமேனியினையும், விளங்குகின்ற ஒளிமிக்க குன்றிமணியைப்போன்ற செந்நிற உடையினையும், கிரவுஞ்சம் என்னும் மலையினது நடுவிடம் பிளக்கும்படி செலுத்திய அழகிய ஒளி மிகுந்த நீண்ட வேல் ஆகிய படையினையும், சேவல் ஆகிய அழகிய கொடியினையும் உடைய முருகப்பெருமான் காப்பாற்றுவதனால், இவ்வுலகமானது இன்பமயமான நாட்களை எய்தி வருகின்றது. ஆதலின் உயிர்களுக்கு இடையூறு இல்லை'' என்பது, இப் பாடலின் திரண்ட பொருள். முருகப் பெருமானின் இத்தகைய திருவுருவத்தினைத் தியானம் செய்க, செய்யின் எல்லா நலமும் எய்தலாம்'' என்பது, இதன் கருத்து.

*(1)* இப்பாடல் நம்மனோர் பலகாலும் எண்ணிச் சுவைத்து மகிழ்தற்கு ஏற்ற வகையில் மிகவும் சுருக்கமாக, எளிய இனிய சொற்களால் இயன்றிருத்தல், வியந்து மகிழ்தற்குரியது. முருகனுக்கும் ஆறு என்னும் எண்ணுக்கும் மிகுந்த தொடர்பு உண்டு. முருகனின் சிறந்த தலங்கள் ஆறு ; முகங்கள் ஆறு ; மந்திர எழுத்துக்களும் ஆறு. ஆதலின் இப் பாடலும் ஆறு வரிகளில் அமைந்திருப்பது, ஒரு பொருத்தமாகக் காணப்படுகின்றது.

(2) மேலும், இப்பாடலின்கண் முருகனுடைய திருவடி, நிறம், ஒளி, ஆடை, வேல், சேவற்கொடி என்னும் ஆறு பொருள்களைப் பற்றியே ஆசிரியர் குறிப்பிட்டுப் புனைந்துரைந் திருத்தலும், கருதற்பாலதாக உள்ளது.

(3) முருகனின் சிவந்த நிறமும், அழகிய தோற்றமும், மணமுடைமை முதலிய தெய்வத் தன்மைகளும், சரவணப் பூம்பொய்கையில் பதுமப்பாயலில் அப்பெருமான் தோன்றியருளிய சிறப்பும், ஆகியவற்றை நினைதொறும் நமக்குத் தாமரை மலரின் நினைவே, முதற்கண் முந்துற்றுக் கிளர்தலின், அவ்வியல்புக்கு ஏற்ப, இப்பாடலும் தாமரை எனத் தொடங்குதல் தகுதிப்பாடு மிக்கதாகத் திகழ்கின்றது. 'தாமரை' என்பது ஒரு மங்கல மொழியாதலும், ஈண்டு நாம் மனங் கொள்ளத் தக்கது.

(4) தாமரை மலர், முருகனின் திருமுகம் முதலிய பிற உறுப்புகளுக்கும் ஒப்புமையுடைய தாயினும், முருகனின் திருவடியையே முதற்கண் நினைவு கூர்ந்து, அதற்கு உவமையாக உரைக்கப் பெற்றது. கடவுளரைப் பாடுங்கால் அவர்தம் திருவடிகளை நினைவு கூர்வதே கவிஞர்களின் இயல்பான பண்பு. இதனைத் திருவள்ளுவர் முதலாகிய எல்லாச் சான்றோர் பாடல்களிலும் காணலாம். 'நின்னிற் சிறந்த நின் தாளிணை யவை' எனப் பரிபாடல் பாடுதற்கேற்பக் கடவுளைக் காட்டிலும், அவர்தம் திருவடிகளே மிகவும் சிறந்தவை என்று கொண்டு, சான்றோர் அனைவரும் பாடுதலின், இப்பாடலிலும் அம் மரபு செவ்விதின் அமைந்தது.

(5) குறுந்தொகை என்னும் சங்கநூல், நானிலத்து ஐந்திணை ஒழுக்கமும் பற்றி நுதலி எழுந்ததாகலின், அப்பொருளையே இப்பாடல் கருக்கொண்டு திகழ்கின்றது. 'தாமரை புரையும் காமர் சேவடி' என்றதனுல் மருதநிலத்தின் கருப்பொருள் ஆகிய தாமரையும், 'பவழத் தன்ன மேனி' என்றதனுல் நெய்தல் நிலத்துக் கருப்பொருள் ஆகிய பவழமும், 'குன்றி ஏய்க் கும் உடுக்கை' என்றதனுல் முல்லைக்கு உரிய தாகக் கருதப்பெறும் குன்றிமணிக் கொடியும், 'குன்றின் நெஞ்சுபக' என்றதனுல் குறிஞ்சிக் குரிய மலையும், ஆக நானிலமும் குறிக்கப்பட் டன.

(6) பாலைக்கெனத் தனியே நிலம் இல்லா மையாலும், முல்லையும் குறிஞ்சியும் முறைமை யில் திரிந்தே பாலை என்று படிவம் கொள்ளு கின்றன ஆதலாலும், அம் முறையில் குறிப் பாகப் பாலை நிலமும் ஈண்டு உணர்த்தப்பட் டது. முல்லைக்குரிய குன்றியையும், குறிஞ்சிக் குரிய குன்றையும் ஒரே வரியில் இயையுமாறு வைத்ததனுல், பாலைநிலம் இங்குச் சுட்டப் பெற்றது எனக் கொள்ளலாம்.

(7) மருதம், நெய்தல், முல்லை ஆகிய ஏனை நிலங்களைக் கருப்பொருள்களாலும், குறிஞ்சியை மலையாகிய முதற் பொருளாலும் சுட்டியமை, 'சேயோன் மேய மைவரை யுலகம்' எனப்படும் குறிஞ்சி நிலவுரிமை முருகனுக்கே யுரியதாதலை யுணர்த்துதற்கு ஆகும்.

(8) முருகன் இளமையும், அழகும் வீரமும் உடையவன் ஆதலின், 'தாமரை புரையும் காமர் சேவடி' என்று இளமையினையும், 'பவ ழத்தன்ன மேனித் திகழ்ஒளி' என்று அழகினை யும், 'குன்றின் நெஞ்சுபக எறிந்த' என்று வீரத்தினையும், ஆசிரியர் விதந்தெடுத்துப் புகழ்ந்தார்.

(9) மேலும், தம்நிகர் இல்லாத தலை வர்க்கு அளியும் தெறலும் என்னும் இரண்டு குணங்கள் இன்றியமையாதன. முருகன் தன் நிகர் இல்லாத தனிப் பெருந் தலைவன், ஆதலின் அப்பெருமானுக்கும் இவ்விரு குணங்களும் உண்டு. எனவே 'சேவலங் கொடியோன்காப்ப' என்றதனுல் அளியும், 'குன்றின் நெஞ்சுபக எறிந்த' என்றதனுல் தெறலும் சுட்டப் பெற்றது.

(10) இப்பாடலில் மருத நிலத்துக் கருப் பொருள் (தாமரை) முதலிலும், குறிஞ்சி நிலத்து முதற் பொருள் (மலை) ஈற்றிலும் அமைந்ததனுல், முறையே அவ்வவற்றிற்குரிய ஊடலும் கூடலும் ஆகிய உரிப் பொருள்கள் 'ஊடுதல் காமத்திற்கின்பம், அதற்கின்பம் கூடி முயங்கப்பெறின்' என்னும் முதுமொழியின் படி நிகழும் இன்பத்தின் இயல்பு உணர்த்திய வாறுயிற்று.

(11) 'சேவலங் கொடியோன்' என்பது சேவலையன்றி, மயிலையும் உணர்த்தியதாகக் கொள்ளலாம். முருகனுக்கு மயிற் கொடியும் உண்டு என்று, 'பல்பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ' எனவரும் திருமுருகாற்றுப் படை வரியால் (122) உணரலாம். ஆண் மயிலுக்குச் சேவல் எனப்பெயர் வழங்குதல் மரபு அன்று ஆயினும்,

''சேவற் பெயர்க்கொடை
சிறகொடு சிவணும்
மாயிருந் தூவி
மயிலலங் கடையே''

எனவரும் தொல்காப்பிய நூற்பாவின் உரை யில், 'செவ்வேள் ஊர்ந்த மயிலுக்காயின் அதுவும் நேரவும்படும்' எனவரும் பேராசிரியர் விளக்கத்தினுல், ஈண்டுச் 'சேவலங் கொடி யோன்' என்புழிச் சேவல் மயிலைக் குறிப்பதாகக் கொள்ளுதலும் பொருந்தும்.

**முடிவுரை:**

இங்ஙனம் பற்பல நுண்பொருள்கள் பொருந்திய இச் சிறந்த இனிய செய்யுள், குணசாகரர் குறிப்பிட்டு வியந்தவாறு, எல்லாக் குற்றமும் தீர்ந்த சிறந்த நல்ல செய்யுளே என்பதில் ஐயமில்லை. சிறந்த இந்தச் செய்யுளைக் கொண்டு, முருகனைப் பலகாலும் துதிசெய்து தியானித்து, நாம் முருகன் அருளைப் பெற்று உய்ய முயலுவோமாக! —ஆசிரியர்.

# அருளிச் செயல் ஓதும் முறைகள்

' மகாவித்வான் '

திரு. பி. ப. அண்ணங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள், காஞ்சிபுரம்

திவ்வியப் பிரபந்தங்களை இயல் சேவிக்கும் காலத்தில், ஒரு விதமான நிபந்தனையும் இல்லாமல், அவரவர்களுக்குத் தோன்றினவாறு நிறுத்துவதே பெரும்பாலும் எங்கும் காணு நிற்கிறோம். அடியடியாக நிறுத்த வேண்டியிருக்க அங்ஙனம் நிறுத்தாமல், முதலடியின் சில சொற்களை இரண்டாம் அடியோடு கூட்டுவது, அவ்வடியின் சொற்களை மேலடியோடு கூட்டுவது, என்று இப்படிக் காணும் முறைகள், எக்காலத்தில் யாரால் எதற்காக ஏற்படுத்தப்பட்டவை? பாராயணங்கள் பண்ணும்போது பொருளை நோக்கி அடிகளை ஒடிப்பது எதற்காக? வடமொழி வேத பாராயணத்திலாவது, தோத்திரப் பாடங்களிலாவது, இப்படிப்பட்ட ஏற்பாடு இல்லையே! திவ்வியப் பிரபந்தங்களுக்கு மாத்திரம் எதற்காக ஏற்பட்டது? ஏற்பட்டாலும் எல்லா இடங்களிலும் எல்லார்க்கும் வேற்றுமையின்றி ஒரேவிதமான ஏற்பாடு இருந்திடக் கூடாதா? நான்கு பேர்கள் சேர்ந்து சேவித்தால், நான்கு பேரும் நான்கு விதமாக நிறுத்தும்படியாய்ப் பல இடங்கள் காண நேருகின்றதே; இஃது என்ன? என்று சில பெரியோர்கள் சர்ச்சை செய்வதுண்டு.

அர்ச்சாவதார வேதமான திவ்வியப் பிரபந்தங்களை, எம்பெருமான் திருவுள்ளம் உகக்குமாறு செவிக்கினிய செஞ் செல்லாகச் சேவிக்க வேணும் என்கிற திருவுள்ளத்தோடும், முன்னோர்கள் ஏற்பாடு செய்த காலத்தில், பொருளின் சேர்த்தியை நோக்கி, நிறுத்துமிடங்களை ஒருவாறு ஏற்பாடு செய்தருளினார்கள். மேலெழ நோக்கும் இடத்துச் சில இடங்களில் அவர்களுடைய ஏற்பாடு பொருத்தமில்லாதவைகள் போல் தோன்றவுங்கூடும். ஆனால் ஆராய்ந்து பார்த்தால் அதுவே இன்சுவை நிறைந்ததாய்ப் பொருத்தமாக இருக்கும். இங்ஙனே பல இடங்களிலும் ஆராய்ந்து பார்க்கையில், நிறுத்துமிடங்களின் ஏற்பாடு முன்னோர்களே செய்தது என்றும், அதுவும் ஆழ்ந்த ஆராய்ச்சியுடன் செய்யப்பட்டிருக்கிறதென்றும் சொல்லும்படியாக உள்ளது. ஆனால் முன்னோர்கள் ஏற்படுத்தின அளவோடு நில்லாமல், காலப்போக்கில் அவரவர்கள் தத்தமக்குத் தோன்றினவாறெல்லாம் நிறுத்தவும் ஒடிக்கவும் இடம் உண்டாயிற்று.

திருச்சந்தவிருத்தத்தில், ''கேடில் சீர் வரத்தன்'' என்கிற பாசுரத்தில், இரண்டாம் அடி, ''நாட்டமாயிரத்தனுடு நண்ணினும்'' என்பது. இங்கு 'நாட்டமாயிரத்தன்' என்பது முழுச்சொல். நாட்டம் என்று கண்ணுக்குப் பெயர் ; 'நாட்டமாயிரத்தன்' என்று ஆயிரம் கண்களையுடைய இந்திரனைச் சொல்லுகின்றது. 'நாட்டமாயிரத்தன் நாடு நண்ணினும்' என்பதற்கு, ஆயிரம் கண்களையுடைய இந்திரனின் உலகைச் சேர்ந்தாலும் என்பது பொருள். இவ்விடத்தில் விவேகிகளோடு அவிவேகிகளோடு வேற்றுமையின்றிப் பெரும்பாலும் எப்படி நிறுத்துகிறார்கள் என்றால், 'நாடினோடு நாட்டமாய்—இரத்தனுடு நண்ணினும்' என்று சேவித்து வருகிறார்கள். சில பெரியோர்கள் இருக்கும்படியே சேவிப்பதும் உண்டு; அது மிகக் குறைவு. பெரும்பான்மையாக விபரீதமாகவே சேவித்து வருகிறார்கள். ஒரு திவ்விய தேசத்தில் பத்திருபது சுவாமிகள் இப்படியே ஏகரீதியாகச் சேவித்ததைக் கேட்ட ஒரு சிறந்த சான்றோர் வருந்திக் கூறினராம் 'இரத்த நாடு' என்று சொல்லுவதை விட 'உரத்தநாடு' என்று சொன்னால் ஓர் ஊரின் பெயரையாவது சொன்னதாக இருக்குமே என்றாராம். அவருடைய பரிதாபத்தை என் சொல்வோம்!

இவ்விதம் பொருத்தமில்லாதபடி ஒடித்து நிறுத்தும் இடங்கள் பல பல உண்டு. அவற்றுக்கு எல்லாமாக இஃதொன்று எடுத்துக் காட்டியபடி. இத்தகைய பொருத்தமின்மைகளைத் திருத்துவதென்றால், அது மிகவும் கடினமான செயலேயாகும். 'அநாதி சம்பிரதாயத்தைப் பாழ்படுத்த வந்துவிட்டான் இவன்' என்கிற தூஷணைக்கும் இடமேற்படும். 'ஸங்கே சக்தி; கலௌ யுகே' (கலியுகத்தில் எண்ணிக்கையே ஆற்றலுடையது) என்றபடி, பெருந்திரளாகச் சேர்ந்து ஒருவிதமாகச் சேவித்துவிட்டால், அதற்கே பிராபல்யம் ஏற்பட்டு விடுமாதலால், அவ்விடங்களில் திருத்துபவர்கள் ஏளனத்திற்கு உரியவராவார்கள். பிறரைத் திருத்த அஞ்சினார்களானாலும் விவேகிகளாயிருப்பவர்கள், தாங்கள் சேவிப்பதைப் பொருத்தமின்றிச் சேவிக்க மாட்டாமல், சொற் சுவைக்கும் பொருட்சுவைக்கும் பொருத்தமாகவே சேவிக்க விரும்புவார்கள். ஆதலால் அப்படி சேவிக்காத போது, இவர்கள் ஒரு பக்கம் இழுப்பதாகவும், பிறர் மற்றொரு பக்கம் இழுப்பதாகவும் காண நேர்ந்துவிடுகிறது. மற்றவரும் விவேகிகளாக ஆகும் வரையில், இப்படிப்பட்ட தொல்லைகளை நீக்குதல் அரிதேயாகும்.

திவ்யப்பிரபந்தம் தமிழ் மொழியில் அமைந்திருப்பதாலும், 'தமிழ் மொழி நமக்குச் சொந்தமானது தானே' என்று ஒவ்வொருவரும் நினைக்கும்படியாய் இருப்பதாலும், சிறிது வாயைத் திறக்கத் தகுதியுடையார் எல்லாருமே பகவத் விஷய அதிகாரிகள் என்று கருதப் படுகின்றனர். அத்தகையவர்களால் திவ்வியப் பிரபந்தங்களுக்கு ஏற்படும் கோளாறுகள் அபாரம். பெரியாழ்வார் திருமொழியில், 'சென்னி யோங்கு' திருப்பதிகத்தில், 'நின்னுள் ளேனாய்ப் பெற்ற நன்மை இவ்வுலகினில் ஆர் பெறுவார்?'' என்கிற அடிக்குப் பொருள் தெரிந்து கொள்ள ஒருவருக்கு விருப்பம் உண்டாயிற்று. அவர் பகவத் விஷய அதிகாரி என்று பெரும்புகழ் பெற்ற ஒரு பெரியாரிடம் சென்று, இந்தத் திருமொழிக்குப் பொருள் விளக்கியருள வேணும் என்று கேட்டார்; 'நின்னுள்ளேனாய்' என்பதற்கு அவர்க்குப் பொருள் விளங்கவில்லை. கேட்டவர்க்கும் அவ் விடத்தில்தான் ஐயப்பாடு. ஒருவர் கேட்கும் போது 'எனக்கும் தெரியவில்லை' என்பது மதிப்புக் குறைவாய்ப் போய்விடும் என்று, பண்டிதர்களாக மதிக்கப்படுபவர்கள் பெரும் பாலும் நினைக்கிற வழக்கமாதலால், அவரும் அப்படியே நினைத்து ஏதாவது ஒருவிதமாக இவர்க்குப் பொருள் சொல்லிவிட வேணும் என்றே நினைத்து, ''நின்னுள்ளே, நாய் பெற்ற நன்மை இவ்வுலகினில் ஆர் பெறுவார்?'' என்று பதப் பிரிவு செய்து பொருள் உரைத்தார். ஒருநாள் திருவரங்கநாதனுடைய கருவறையி னுள்ளே ஒரு நாய் புகுந்துவிட்டது; அந்த ஐதிகத்தை இங்கே அருளிச் செய்கிறார் பெரியாழ்வார். கடைகெட்ட நாய்கூட உன் திருவடியருகே வரும்படியான பாக்கியம் பெற்று விட்டது. அத்தகைய பாக்கியத்தை இவ்வுலகினில் வேறு யார் பெறுவார் என்பதாகப் பொருள் கூறிவிட்டார். அதற்கு மேலும் ''ஐதிகம் அறியாதவர்கள் வேறு விதமாகவும் இதற்குப் பொருள் சொல்லக்கூடும். அது வெல்லாம் பொருளேயன்று. இதுவே தொன்று தொட்டுப் பெரியோர்கள் கூறிவரும் சம்பிரதாயப் பொருள்'' என்றும் சொல்லிவிட்டார்.

உண்மையில், இவ்விடத்தில் நாயும் இல்லை, பேயும் இல்லை. 'நின்னுள்ளேன் ஆய்ப் பெற்ற நன்மை''—அடியேன் நின்னிடத்தில் ஈடுபட்ட வனுகிப் பெற்ற நன்மையை இவ்வுலகினில் வேறு யார் பெறுவார்? என்பதுதான், இவ் விடத்திலுள்ள கருத்து. இங்ஙனம் மேல்நோக் காகத் தத்தமக்குத் தோன்றுகின்ற பொருளைக் கொண்டு, அவரவர்கள் அருளிச் செயல்களில் அனர்த்தம் செய்கிறபடிகள் ஒன்றிரண்டல்ல; அவை உரைக்குங்கால் பாரதமாம்!

இங்ஙனே திருத்த வேண்டிய பிழைகள் நூற்றுக்கணக்காக நேர்ந்திருக்கின்றன. ஞாபகத்திற்கு வருகின்ற மற்றோர் அதிசயம் கூறுகின்றேன். பெரியாழ்வார் திருமொழியில், ''புழையிலவாகாதே நின்செவி புகர் மாமதீ'' என்பது ஒரு பாசுரம். இவ்விடத்தில் பலரும் 'நின்செவீ' என்று அநாவசியமாக நீட்டிச் சேவிப்பதுண்டு. ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் சந்நிதியில் ஒரு திருநாளில் குழாமாக இருந்து சேவிக்க நேர்ந்தபோது, அடியேன் பக்கத்திலிருந்து சேவித்தவர், 'பலரும் சேவிக்கிற வழக்கப்படியே 'நின் செவீ' என்று நீட்டியே சேவித்தார். அவர் நன்கு வாசித்து விவேகியாகவும் இருந்தபடியாலே, 'செவீ' என்று நீட்ட வேண்டியது அவசியமா? என்று அவரைக் கேட்டேன். 'எனக்குப் பாடம் (சந்தை) ஆனபடியே நான் சொல்லுகிறேன். அவ்வளவே எனக்குத் தெரியும்' என்றார் அவர். 'ஆனாலும், தேவரீருடைய அறிவாற்றலைச் சிறிது பயன்படுத்திப் பார்த்திருக்கலாமே' என்றேன். செவி என்று காதுக்குப் பெயர். ஆகையாலே நீட்டல் வேண்டாம் என்று தோன்றுகிறது என்றார். இந்தச் சர்ச்சையை அவருடைய ஆசிரியர் ஒருவர் குறிக்கொண்டிருந்து, என்ன சர்ச்சை நடந்தது என்று பிறகு அவரைக் கேட்டார். செவீ என்கிற நீட்டலைப் பற்றிய சர்ச்சை என்று நடந்த செய்தியைச் சொன்னார் அவர். அதற்கு அந்தப் பெரியார் சொன்னாராம். அவன் ஒரு பித்தன், நீ ஒரு பேயன்; காது ஒன்றுதானா இருக்கும். இரண்டல்லவோ காதுகள்; 'ஒரு செவியானால் செவியென்றே சொல்லத்தகும். இரண்டாகையாலே செவீ என்ன வேண்டாவா? 'ஹரி சப்தங் கூட அறியாதவன் ஒன்று சொல்வதும், அதை நீ ஆமோதிப்பதும் நன்றாய் இருக்கிறது' என்றாராம். வடமொழியில் ஹரி: ஹரீ, ஹரய: என்பது போலத் தென்மொழியில் செவி, செவீ, செவய: என்று அந்த ஆசிரியர் சப்த மஞ்சரிகூடப் புனைந்துவிட்டார் போலும். அவர் எளியவரல்லர். ஆசிரியப் பெரும் பதவி வகுத்தவர். விநோதமாகச் சொன்னாருமல்லர். உண்மையாகவே அப்படி மனத்தில் நினைத்துச் சொன்னார்.

இவ்வண்ணமாக அடியேனுடைய அனுபவத்தில் நேர்ந்த இதிகாசங்களை எழுதுவதானால், அஃது ஒரு பெரிய புத்தகமாகும். இப்படியாக நேர்ந்திருக்கிற பிறழ்வுகளைத் திருத்த யாராலும் முடியாது. தமிழ்இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுணர்ந்து, திவ்யப் பிரபந்த வியாக்கியானங்களையும் பலகால் சேவித்து நிருபண நிபுணத்துவமும் பெற்றிருக்கின்ற மகான்கள், ஆங்காங்கு இல்லாமற் போகவில்லை; அப்படிப்பட்டவர்கள் அருளிச் செயல் சேவிக்கும் முறைகள், மிகத் திருத்தம் பெற்றேயிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆயினும் ''எதார்த்தவாதி வெகுஜன விரோதி'' என்கிறபழமொழி எமக்கு நன்கு தெரிந்திருக்கச் செய்தேயும்; நெஞ்சினுள் உறையும் கருத்துக்களை வெகுஜன கோபத்திற்கு அஞ்சி வெளியிடாமல் இருக்கும் வழக்கமில்லை. மிக அவசியம் என்றும் இதம் என்றும் நமக்குத் தோன்றுகின்ற நடைமுறைச் செய்திகளை வெளியிட்டுவிட்டால், அஃது அடியோடு பலனின்றிப் போய்விடாது. காலப்போக்கில் தகுதியுடைய நல்ல பெரியோர்கள் மூலமாகவாவது அது பயனுடையதாக நிறைவேறியே தீரும் என்கிற நம்பிக்கையிருப்பதனால் வெளியிடலாகிறது.

பல்லாண்டு என்பதைப் 'பெல்லாண்டு' என்று உச்சரித்தல்; 'பிரிவின்றியாயிரம்' என்றவிடத்து பிடவன்றி என்று உச்சரித்தல்;

'படைப்போர்' என்பதைப் 'படபோர்' என்பது; 'வாழாட்பட்டு' என்பதை 'வாழால்பட்டு' என்பது; 'எங்கள் குழுவினில்' என்பதை 'எங்கள் குழவினில்' என்பது; 'புகுதலொட்டோம்' என்பதை 'புகுதலிட்டோம்' என்பது; 'இராக்கதர்வாழ்' என்பதை 'இராக்கதிர் வாழ்' என்பது; 'வரம்பொழி' என்பதை 'வரம் பொழில்' என்பது; 'உடுத்துக்கலந்த . . . . கலத்ததுண்டு' என்பது. 'உன்தனுக்கு' என்பது. 'அணிகோட்டுயர்கோன்' என்பது. இப்படிப் பட்ட சேவைகள் எவ்வூரிலும் ஒரேவிதமாகக் காதில் விழுவதுண்டு. ஆனல் சேவிக்க வேண்டிய முறைப்படி சேவிப்பவர்கள் எங்குமே இல்லையென்று நாம் சொல்லவில்லை. பிழையில்லாமலும் பரமபோக்யமாகவும் சேவிப்பவர்கள்ஆங்காங்கு ஒருவரிருவர் எழுந்தருளியேயுள்ளார்கள். பெரும்பான்மையாக நமது காதில் விழும் அப சப்தங்களானவை நன்ருகச் சேவிப்பவர்களையும் மறக்கச் செய்துவிடுகின்றன.

திருப்பாவை சாத்துமுறை நாடோறும் ஒவ்வொரு திருமாளிகையிலும் உள்ளது. எந்த இரண்டு பாசுரங்களையாவது பிழையில்லாமல் சேவிப்பவர்கள் உண்டா?

* 1. ''பெத்தம்மேல் துண்ணும் குலத்தில் பிறந்து''

2. ''ஏழேழு பரவைக்கும்''

3. ''மைத்துனன் காமங்கள் மாற்று''

4. ''பறைகொண்ட வார்த்தை''

5. ''பைங்கமலத் தண்டரையில்''

6. ''திருமாலால் எங்கும் திருவருள் பத்தி''

7. ''இன்பறவரென்பாவாய்''

என்று எப்படியெல்லாமோ, பிழை பெருக வாய் வந்தபடி சொல்லுபவர்கள் எங்கும் மலிந்துள்ளார்கள். ''பட்டர்பிரான்''என்பதை''பட்டற பிரான்'' என்பது. ''விட்டு சித்தன்'' என்பதை ''விஷ்ணு சித்தன்'' என்பது . . .ஆக இப்படிப்பட்ட பிழைகளும் அபாரம். விஷ்ணு சித்தன் என்றுதானே சொல்வடிவம் ; அதை அப்படியே சொன்னல் என்ன பிழை? என்று ஆட்சேபிப்பாருமுளர். விஷ்ணுசித்தன் என்பது வடசொல் வடிவமானுலும், தமிழ்ப் பிரபந்தங்களில் வழங்கும் சொல்வடிவம் அதுவன்று ; விட்டுசித்தன் என்பதுதான் தமிழ்ச் சொல். முக்தி, பக்தி முதலிய வடசொற்களைத் தமிழில் முத்தியென்றும் பத்தியென்றும் உச்சரிப்பார் இல்லை. அப்படி உச்சரித்தால் அது பிழையேயாகும். இது போலவே விஷ்ணுசித்தன் என்பதும், விட்ணுசித்தன் என்பதும் தவறேயாகும். இப்படிப்பட்ட சொல் தவறுகளையும் எழுத்துத் தவறுகளையும் நாம் எடுத்துக் காட்டப் புகுந்தால் ஓரளவில் அடங்காது. ஆங்காங்கு திவ்வியப் பிரபந்தங்கள் சேவிப்பவர்களைத் தினப்படியாக யாவரும் காண முடியுமாதலால், இங்கே நாம் எடுத்துக்காட்டிய செய்திகள் அனைவர்க்கும் பிரத்தியட்சமாகக் கூடியவையே. இந்த வியாசத்தை அவரவர்கள் வாசித்துப் பார்க்கும்போது, இனி இப்பிழைகள் புகாதபடி சேவிக்க வேணுமென்ற ஆசை கொள்வார்கள். ஆனல் அநாதிவாசனை ஏறிக்கிடப்பதனல், பாசி படர்வதுபோல் பழைய தப்புப் பாடங்களே தலைகாட்டித் தீரும்.

நல்ல விவேகியான ஒரு சுவாமி, திருப்பாவையில், நாயகனுய்ப் பாசுரத்தில் ''ஆயர் சிறு மயிரோ உமக்கு'' என்றே சேவித்து வந்தார்; அடியேனும் தாங்க முடியாமல், ஒரு நாள் அவரை அழைத்து ''அப்படிச் சொல்லவேண்டாம்; ''ஆயர் சிறுமியரோமுக்கு'' என்னவேணும் என்று சொல்லி, அச்சொல்லின் வடிவத்தையும் பொருளையும் விவரித்தேன். அதுகேட்டு அவர் ''நாற்பது வருஷ காலம் இப்படித் தவறுதலாகச் சொல்லி வந்துவிட்டேனே'' என்று மிகவும் அநுதபித்துத் திருத்திக் கொண்டார். ஆனுலும் இரண்டொருமாதம் கடந்த பிறகு அவர் பழையபடியே 'ஆயர் சிறு மயிரோ உமக்கு' என்றே சொல்லத் தொடங்கிவிட்டார். அவ்விடத்தில் திருத்திக் கொண்டதாக ஞாபகங் கூட அவர்க்கு இல்லையாயிற்று.

அவிவேகிகளாயிருப்பவர்கள், வாயில் வந்தபடி சேவித்தல் என்பது வியக்கத் தக்கதன்று. நல்ல விவேகிகளாயிருப்பாருங்கூட, ''நமது வாயில் என்ன சொல் வருகிறது? அதற்குஎன்ன பொருள்?'' என்று சிறிதும் ஆராய்ச்சி செய்யாமலே, தவருகச் சேவித்து வருகிருர்களே என்கிற துக்கம் அடியேனுக்கு அபரிமிதம். அடியேனுடைய பாபம், பிறர் வாயில் வரும் பிழைச் சொற்களே காதில் விழப் பிராப்தமாகிறது. அவை கேட்டுப் பொறுத்திருக்கும் இயல்புமில்லை பாவியேனுக்கு. ஆழ்வார்களின் ஈரச் சொற்களுக்கு இப்படியும் சில தண்டனைகள் ஏற்பட வேணுமா என்கிற வருத்தம், நெஞ்சில் அபரிமிதமாக உண்டாகிறது. தவருகச் சொல்லுமவர்கள் ஆப்தர்களா? என்று கூட ஆலோசியாமல், அவர்களோடு போராடவும், திருத்தங்களைத் தெரிவிக்கவும் நேர்ந்து விடுகிறது. குணக்கிராகிகளாய் இருப்பவர்கள், பொருளின் உண்மைகளைக் கேட்டு உகக்கிருர்கள் ; திருத்திக் கொள்ளவும் மனங் கொள்கிருர்கள். 'இவன் சொல்லி நாம் கேட்பதா' என்றிருக்குமவர்கள், 'உன்னுடைய விசுவாமித்திர சிருஷ்டிகள் எம்மிடமும் விலை செல்லுமென நினைக்கிருயோ?' என்று வெறுத்துப் பேசுவார்கள். இவற்ருல்

---

* மேற்குறித்த பிழையான பாடங்களுக்குப் பின் வருபவை, பிழையற்ற திருத்தமான பாடங்கள் ஆகும். அவைகள் வருமாறு :

1. பெற்றம் மேய்த்துண்ணும்.
2. ஏழேழ் பிறவிக்கும்
3. மற்றை நம் காமங்கள் மாற்று
4. பறை கொண்ட வாற்றை
5. பைங்கமலத் தண் தெரியல்
6. திருமாலால் எங்கும் திருவருள் பெற்று
7. இன்புறுவர் எம்பாவாய்

அடியேனுக்கு இழப்பும் பேறும் யாதுமில்லை யாதலால், என் பணியை யான் ஆற்றிக் கொண்டே வருகிறேன்.

தமிழ் வேதமென்றும், வடமொழி வேதத்திற் காட்டிலும் மேம்பட்டதென்றும், நம் ஆசாரிய சார்வபௌமர்கள் பாராட்டின திவ்வியப் பிரபந்தங்களில், நாம் அசிரத்தை காட்டலாகுமோ? எழுத்துக்களையும் சொற்களையும் மனம் போனபடியும் வாய் வந்தபடியும் சொல்லலாகுமோ? புத்தகங்கள் கண்ணாடிபோல் அச்சிடப்பட்டிருக்கின்றன. எழுத்துக்களை ஊன்றிப் பார்த்துப் பிழைபுகாவண்ணம் சிந்தனை செய்ய வேண்டாவோ? 'எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமே'' என்று ஆழ்வார் அருளிச் செய்திருப்பதனுல், அபத்தமாகவோ சுபத்தமாகவோ எப்படிச் சொன்னாலும் இன்பமேயாகு மென்பதில் சந்தேகமில்லை. ஆனாலும் அபத்தங்கள் புகாவண்ணம் காக்கவே வேண்டும். எம்பெருமான் வாத்சல்ய குணத்தினால் தோஷ போக்யன் ஆயினும், அது கொண்டு நாம் தோஷங்களை மனம் அறிந்து செய்யலாகாதன்றோ?

இது நிற்க. வடமொழியில் பிலுதம் என்பது, தமிழில் அளபெடை எனப்படுகிறது. அதாவது மூன்று மாத்திரை. வேதத்தில் பலவிடங்களில் அளபெடை வரும். அங்கெல்லாம் அது தனிப்படத் தெரியும்படி நீட்டி நிறுத்தி ஓதுவார்கள். திவ்வியப் பிரபந்தங்களிலும் அப்படியே பல இடங்களிலும் அளபெடை வருவதுண்டு. பெரியாழ்வார் திருமொழியில் (5-4-2) 'இறவுசெய்யும் பாவக்காடுதீக் கொளீஇ' வேகின்றதால்' என்றவிடத்து 'தீக் கொளீஇ' என்பதில், ளீகாரத்தை மூன்று மாத்திரை நீட்டி நிறுத்திச் சொல்லவேணும். இப்படி ஓரிடமன்று; 'தெள்ளிதாகவுள்ளத்தைச் செந்நிறீஇ' (முதல் திருவந்தாதி 30) 'செந்நெற்கூழை வரம் பொரீஇ' (பெரிய திருமொழி 3-5-3), 'தோளிசேர் பின்னை பொருட்டெருதேழ் தழீஇ' (திருவாய்மொழி (4-2-5), 'ஒண்சுடரடிப்போதாதொன்று விண்செலீஇ' 'வானவர் முறைமுறை வழிபட நிறீஇ' (திருவாசிரியம் 5) என்றிப்படி பல இடங்களுண்டு. இவ்விடங்களில் அளபெடை இருப்பதாக அறிந்துள்ளவர்கள் மிகச் சிலரேயாவர். அவ்விடங்களைச் சேவிக்கையில் கேட்கும்போது மிகவும் பரிதாபமாக இருக்கும். நெடில்களை நீட்டுகிற அளவுகூட இல்லாமல், குறிலாகவே சேவிப்பர் பலர். இந்த யுகத்தில் திருந்தக் கூடியதாகத் தோன்றவில்லை இது. நீட்ட வேண்டாத இடங்களில் நீட்டுவதோ அபரிமிதம். திருப்பாவையில் (ஏரார்ந்த கண்ணி) என்பதை (ஏரார்ந்த கண்ணீர்) என்று நீட்டி, கண்ணனைக் கண்டவுடனே யசோதைக்கு ஆனந்தக் கண்ணீர் பெருகிவிட்டதென்று, இவர்களும் கண்ணீர் பெருக்கத் தொடங்கி விடுவார்கள். திருவாய்மொழியில் 'மாமணி வண்ணாவுன் செங்கமலவண்ண மென்மலரடி' என்றவிடத்து, பிரித்து நிறுத்துகையில் செங்கமலவண்ணா! என்று திருவாய்ப்பாடி வரையிலோ, திருக்குருகூர் வரையிலோ நீட்டுபவர் பலர். இப்படிப் பொருத்தமில்லாது நீட்டுகிறவர்கள் அளபெடை வருமிடங்களில் நீட்ட வேணுமென்பதை அடியோடு அறியாமலேயிருந்து வருகிறார்கள். திருத்தித் தருவாரும் இல்லை. ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் பக்தி சிரத்தையுடன், பொருள் உணர்ந்து, பிழையறச் செம்மையாக ஓதுவதும், ஓதுவிப்பதும் அன்பர்கள் அனைவருக்கும் கடமையாகும்.

---

## பிழையறக் கற்று ஓதுக!

அழித்துப் பிறக்க ஒட்டா அயில்வேலன் கவியை, அன்பால்

எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்! எரி மூண்டதென்ன

விழித்துப் புகைஎழப் பொங்கு வெங்கூற்றன் விடும்கயிற்றால்,

கழுத்திற் சுருக்கிட்டு இழுக்குமன்றோ? கவி கற்கின்றதே!

—அருணகிரிநாதர்.

# திருஞானசம்பந்தரின் சிறப்பியல்பு

(சிவநேசன்)

## முன்னுரை:

தமிழகத்தின் சமுதாயப் பெருந் தலைவர்களில் ஒருவரும், சைவ சமய ஆசிரியர்களில் தலைசிறந்தவருமாக விளங்குபவர், திருஞான சம்பந்தப் பெருந்தகையார். அவருக்கே உரிய சிறப்பியல்புகள் பலபல. அவைகளுள், அவர்தம் தமிழ்ப்பற்று மிகவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். திருஞான சம்பந்தருக்கு முன்னரே, தொல்காப்பியல், திருவள்ளுவர், இளங்கோவடிகள், நக்கீரர் முதலிய பற்பல பெருஞ் சான்ருேர்கள் இருந்திருப்பினும், அவர்களையெல்லாம் விட ஒருவகையில் தமிழ்ப் பற்றில் தலைசிறந்து விளங்கியவர், திருஞான சம்பந்தரேயாவர் எனத் துணிந்து கூறலாம்.

தமக்கு முன்னிருந்த தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோவடிகள், நக்கீரர் போன்ருேர் பிறர் எவரும், தம் பெயரில் தமிழ் மொழியைச் சார்த்திக் கொண்டு, தமிழ்த் தொல்காப்பியன், தமிழ்த் திருவள்ளுவன், தமிழ் இளங்கோ, தமிழ் நக்கீரன் என்று தம்மைச்சுட்டிக் கொண்டதாகத் தெரியவில்லை. ஆனுல் ஞானசம்பந்தப் பெருமானே, ''தமிழ் ஞானசம்பந்தன்''! ''தமிழ்ஞானசம்பந்தன்!'' என்று முழக்கமிட்டுத் தம்மைப் பலகாலும் குறிப்பிட்டுக் கொள்கின்ருர்.

## மூல இலக்கியம்:

தமிழகத்தின் மூல முடுக்கர்களிலெல்லாம் இற்றைக்கு 1300 ஆண்டுகளுக்கு முன்னரேயே, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பியபெருமை திருஞானசம்பந்தருக்கே உண்டு. வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால் வகைப் பாடல்கள் மட்டுமே, பெரும்பாலும் சங்ககாலத்தில் வழங்கப் பெற்று வந்தன. திருஞானசம்பந்தப் பெருமான்தான், அவைகளின் வேருன, பலப்பல புதிய கவிதை வகைகளைத் தமிழ் மொழியில் முதன்முதலில் பாடியருளினுர்.

திருஞானசம்பந்தர் அருளிய பாடல்களின் சொல் புதியது, பொருள் புதியது, நடை புதியது, சுவை புதியது. ''வாசி தீரவே காசு நல்குவீர்'' என்பன போன்ற சிறுசிறு பாடல்கள் முதல், ''மாதர் மடப்பிடியும் மட அன்னமும் அன்னதோர் நடை உடை மலைமகள் துணை என மகிழ்வர்'' என்பன போன்ற, பல அரிய பெரிய பாடல்வகைகளை யெல்லாம், அருளிச் செய்தவர் திருஞான சம்பந்தரே யாவர். திருவிராகம், வழிமொழித் திருவிராகம், திருஇருக்குக்குறள், ஏகபாதம், திருவெழு கூற்றிருக்கை, சக்கரமாற்று, சந்தஇயமகம் முதலிய பலவேறுவகையான பாடல்களையும், தமிழ்மொழியின் ''மூலஇலக்கியம்'' என்று போற்றத்தக்க வகையில் அருளிச் செய்தமை, திருஞானசம்பந்தருக்குரிய தனிப் பெரும் சிறப்பியல்புகளில் ஒன்ருகும்.

## நாட்டுப்பற்று:

இந்நாளில் நாட்டுப்பற்று அல்லது தேச பக்தி என்பது, ஒவ்வொருவருக்கும் இன்றியமையாது இருக்க வேண்டிய பண்புகளில் ஒன்ருகப், பெரிதும் கருதப்பெறுகின்றது. ஆசிரியர் திருவள்ளுவர் தமது திருக்குறளில் ''நாடு'' என்னும் தலைப்பில், ஒரு நாட்டிற்கு உரிய இயல்புகளையெல்லாம் விளக்கிக் கூறியிருக்கின்றனரே யன்றி, நாட்டுப்பற்று அல்லது தேச பக்தி என்பது இன்றியமையாதது என்று, வற்புறுத்தியிருப்பதாகத் தெரியவில்லை.

ஆயினும், ஒருவகையில் தமிழகத்தில் நாட்டுப்பற்றுணர்வுக்கு வழி வகுத்தருளியவர், திருஞானசம்பந்தரே எனலாம். அந்நாளில் தமிழ்நாடு, பல்லவர்-களப்பிரர்-சாளுக்கியர்-வடுகக் கருநாடர் முதலிய அயலவர்களாலும், பௌத்தம் சமணம் முதலிய அயலகச் சமயத்தாராலும், பெரிதும் சிதைந்து சீரழிந்து கிடந்தமையால், நாட்டுப்பற்றுக்கு மூலமாக, அவரவர் தோன்றிய ஊரின்பால் பற்றுக் கொள்ளுதல் இன்றியமையாததென்று, திருஞானசம்பந்தர் கருதியதாகத் தெரிகின்றது. நாம் தோன்றியருளிய தலத்தின்பால், சம்பந்தர் கொண்டிருந்த பற்றுணர்வுக்கு அளவேயில்லை.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனரும் வேண்டிக் கொண்டபடி, மதுரைமாநகரில் பாண்டியனின் வெப்பு நோயைத் தீர்க்க, அவனது அரண்மனைக்குச் சம்பந்தர் சென்ற போது, பாண்டியன் அவரை வணங்கி, தங்களுடைய ஊர் யாது? என்று வினவினுன். அவர் அதற்கு விடையாக,

''பிரமனூர், வேணுபுரம், புகலி, வெங்குரு, பெருநீர்த் தோணி
புரம், மன்னு பூரந்தராய், பொன்னஞ் சிரபுரம், புறவம், சண்பை,

அரன்மன்னு தண்காழி, கொச்சைவயம்
உள்ளிட்டு அங்கு ஆதியாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்ற திருக்
கழுமலம், நாம் பரவும் ஊரே''

என்று தொடங்கும் திருப்பதிகத்தை அருளிச் செய்திருப்பது, திருஞானசம்பந்தர், தாம் தோன்றிய ஊரின்மேற் கொண்டிருந்த பற்றுணர்வினையும், பெருமிதச் சிறப்பினையும் தெற்றென உணர்த்துகின்றது. தம்முடைய ஊர் இன்னதென்று மட்டுமே பொதுவாகக் குறிப்பிட்டு அமைந்து விடாமல், அதற்குரிய பெயர்களையும் வரலாறுகளையும் விவரித்து, விரிவாகப் பாடியிருப்பது, சம்பந்தரின் சிறப்பியல்பினை உணர்த்துகின்றது.

இங்ஙனம் சம்பந்தருக்கு முன்னர் வேறு பிறர் எவரும் தாம்தோன்றிய ஊரின் பற்றுணர்வினைச் சிறப்பித்து உரைத்திருக்கக் காண்கின்றிலோம். தாம் தோன்றிய திருவூரைக் குறித்து, அவர் அருளிச் செய்தனவாக, இன்று நமக்குக் கிடைத்துருப்பன மட்டுமே, 67 பதிகங்கள் ஆகும் எனின், வேறு பிறிது கூறுதலும் வேண்டுமோ?

''தான்பிறந்த நாட்டின்கண்
தனிப்பற்றும் உணர்வுமிலான்,
ஏன்பிறந்தான் ? வீண்கொடியன்!
எனும்இழிவே எய்துகிற்பான் *
தேன்சிறந்த நம்தமிழும்
செழுஞ்சமயம் கலைகளுமே.,
வான்சிறந்த மாட்சியஎன்
றுணராதான் மடவோனே''

— தமிழாக்கம் : ந. ரா. முருகவேள்.

என்று இக்காலத்திற் பெரிதும் வற்புறுத்தப் பெறும் தேசபக்தி என்னும் நாட்டுப்பற்று ஆகிய நல்லுணர்விற்கு, முதன்முதல் நமது தமிழகத்தில் அடிகோலி வழிவகுத்துக் காட்டியவர், திருஞானசம்பந்தரே என்று துணிந்து கூறுதல் சாலும்! இதுவும் அவர்தம் பெருமைக்குரிய சிறப்பியல்புகளுள் ஒன்றாகும்.

## பன்னிரண்டு பெயர்கள்:

திருஞானசம்பந்தர், ஒரு பெரும் சமுதாயத் தலைவர் ஆக விளங்கத்தக்க நிலையில், இயல்பாகவே கருவில் திருவுடையராகத் தோன்றியருளிய சான்றோர் ஆவர். தெளிந்து சிறந்த உணர்வும், திட்டவட்டமான கருத்தும், அழுத்தந் திருத்தமான சொல்வன்மையும் வாய்ந்தவர், அவர்! ஆதலின், அவர் தம்முடைய ஊருக்குப் பன்னிரண்டு பெயர்கள் உண்டு என்று கூறி, அவற்றிற்குக் காரணமான வரலாறுகளையும் குறிப்பிட்டருளுகின்றார்:

(1) பிரமபுரம் : பிரமதேவர் பூசித்துப் பலவகை பேறுகளைப் பெற்ற தலம். ''ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்து ஏத்த, அருள்செய்த பீடுடைய பிரமாபுரம்''.

(2) வேணுபுரம் : தேவேந்திரன் சூரபதுமனுக்கு அஞ்சித் தன் மனைவியுடன் ஓடி வந்து, வேணு (மூங்கில்) ஆக வடிவம்கொண்டு மறைந்திருந்து தவம் புரிந்து அருள் பெற்ற தலம்.

(3) புகலி : சூரபதுமன் முதலிய அசுரர்களுக்கு அஞ்சித் தேவர்கள் புகலடைந்து இறைவனை வழிபட்டு உய்ந்த தலம்.

(4) வெங்குரு : அசுரர்களின் குருவாகிய சுக்கிராச்சாரியர் (வெங்குரு) வழிபட்டு, தேவர்களின் குருவாகிய வியாழனுக்கு (பிருகற்பதிக்கு)ச் சமமான பெருமையைப் பெற்ற தலம்.

(5) தோணிபுரம் : உலகமெல்லாம் அழியும் பிரளய வெள்ளத்திலும் அழியாமல், பிரணவ வடிவமாகிய தோணியாகிய மிதந்து தன்பால் இறைவனும் இறைவியும் எழுந்தருளப் பெற்ற தலம்.

(6) பூந்தராய்: இரணியாக்கன் என்னும் அரக்கனை அழித்துப் பூமியை மீட்ட திருமால், அதனைத் தாராக மார்பில் அணிந்து கொண்டு வழிபட்டு அருள்பெற்ற தலம்.

(7) சிரபுரம்: தேவர்கள் திருப்பாற்கடல் கடைந்து அமுதம் உண்டபோது, மறைந்து வந்து உண்ணப்புகுந்த சயிங்கேயன் என்னும் அசுரனை மோகினி வடிவில் இருந்த திருமால் அகப்பையால் வெட்ட, உடல் கேது என்றும், தலை இராகு என்றும் இரு துண்டங்களாயின. அவற்றுள் தலை (சிரம்) ஆகிய இராகு என்பவன் வழிபட்டு, அருள்பெற்ற தலம்.

(8) புறவம்: சிபி வேந்தனைச் சோதிப்பதற்காகப் புறு வடிவம் கொண்டு போந்த அக்கினி தேவன், சிபி வேந்தனைச் சோதித்துத் துன்புறுத்திய பாபம் தீர, பூசித்து அருள் பெற்ற தலம்.

(9) சண்பை: கபில முனிவரின் சாபப்படி, யதுகுலத்தவர் அழியும்வண்ணம் ஒருவனின் வயிற்றில் இரும்புலக்கை பிறக்க, அது தம் குலத்தை அழிக்காதபடி அதனை அராவித் துகளாகச் செய்து வீசிய இரும்புப் பொடிகள் சண்பைப் புல்லாக வளர்ந்து நிற்க, அச்சண்பைப் புல்லின் தண்டுகளைப் படையாகக்கொண்டு ஒருவரோடொருவர் போர்புரிந்து யது குலத்தோர் அழியுமாறு செய்த பாவம் தீரும் பொருட்டு, கண்ணபிரான் பூசித்து அருள் பெற்றதலம்.

(10) காழி : சிவபிரான்பால் நடனத்தில் தோல்வியுற்ற காளியும், காளிதன் என்னும் பாம்பும் பூசித்து அருள்பெற்றுக் காவல் புரிந்து வரும் தலம். ஸ்ரீகாளி என்பது, சீகாழி அல்லது சீர்காழி என வழங்குகின்றது.

* "Breathes there the man with soul so dead, who never to himself hath said, 'This is my own, my native land'...."

—Sir Walter Scott.

(11) கொச்சைவயம்: ஒரு சமயம் கங்கையாற்றில் படகு ஏறிச் செல்லுங்கால், மச்சகந்தி என்னும் மீனவப் பெண்ணைப் புணர்ந்து, தாம் அடைந்த பழியும் நாற்றமும் போகும்பொருட்டு, பராசரமுனிவர் பூசித்து அருள்பெற்ற தலம்.

(12) கழுமலம்: உரோமசர் என்னும் முனிவர் பூசித்து, தமது மலம் கழுவப்பெற்று, இறைவனிடம் ஞானோபதேசம் பெற்ற தலம்.

**நெறிபிறழா ஒழுங்குணர்ச்சி:**

இப்பன்னிரண்டு பெயர்களையும் இவ் வரிசையில் வைத்துத்தான், சம்பந்தர் எப்போதும் குறிப்பிடுவர். இப்பெயர்களுள் எதனையும் முன்பின்னாகவோ, வரிசையை மாற்றியோ, ஒருபோதும் குறிப்பிடமாட்டார். பிற புலவர்களாயின் ''இது செய்யுளாதலின் முறை பிறழவைக்கப்பெற்றது'' என்று ஆங்காங்கு விளக்கம் கூற நேரும்படி, தம் மனம் சென்றவாறெல்லாம் மாற்றி மாற்றி அமைத்து பாடிவிட்டுச் செல்வர்.

ஆனால் சம்பந்தரோ ஒருபோதும் அங்ஙனம் செய்யமாட்டார். திருஞானசம்பந்தர் ஒரு பெரும் கொள்கை வீரர் ( An uncompromising Hero of principles & policies )! பல்பெயர்ப்பத்து, இருக்குக்குறள், மொழிமாற்று, ஏகபாதம், சக்கரமாற்று, கோமூத்திரி, வழிமொழித்திருவிராகம் என்னும் எல்லாப் பதிகங்களிலுமே, இப்பன்னிரு பெயர்களையும் ஒரு சிறிதும் மாற்றுமல், இவ்வரிசை முறைப்படியே வைத்து, மிக உன்னிப்பாகச் சம்பந்தர் அருளிச் செய்துள்ளார்.

இம்மட்டோ! இப்பெயர்களுள் எதனையேனும் குறிப்பிட நேரின், அதனை இத்தனையாவது பெயர் என்று வரிசை எண்ணில் வைத்தே குறிப்பிடுவார். எடுத்துக்காட்டாக, 'பூந்தராய்' என்பது 6-ஆம் பெயராதலின்,

> ''ஒன்றிரண்டு ஒருமூன்றொடு சேர்பதி,
> பூவில் அந்தணன் ஒப்பவர்
> பூந்தராய் போற்றுதுமே''

என்று, ஆறுவதாகிய (1+2+3=6) பெயரை உடைய தலம் என்றே, பூந்தராய் பற்றிப் பாடுவார். இங்ஙனமே சீகாழி என்பது இப்பெயர்களின் வரிசையில் 10ஆம் பெயராதலின்,

> ''ஆறும் நாலும் உளதாக வைத்த
> பதியான ஞான முனிவன்''

என்று, பத்தாவது (6+4=10) பெயரை உடைய தலம் என்றே, சீர்காழி பற்றிச் சுட்டி உரைப்பர்.

**முடிவுரை:**

இது திருஞானசம்பந்தப் பெருமானுக்குரிய சிறப்பியல்புகள், பலவற்றுள் ஒன்றாகும். இதனால், இவரது ஊர்ப்பற்று (நாட்டுப்பற்று) மட்டுமேயன்றி, நெறிபிறழா ஒழுங்குணர்ச்சி, திட்டவட்டமான கொள்கைத்தெளிவு, நிலை மாறா உறுதிப்பாடு முதலிய பண்புநலங்கள் தெளிவுற விளங்குதல் காணலாம். இன்னோரன்ன சிறப்பியல்புகள் பல திருஞானசம்பந்தருக்கு உண்டு என்பது, அவர்தம் வாழ்க்கை வரலாற்றாலும், வாய்மொழியாகிய தேவாரத் திருப்பாடல்களாலும், இனிது விளங்குகின்றது. இதனாலேயே அவர் சைவ சமய ஆசிரியர்களில் தலைசிறந்தவராகத் தன்னிகரற்று விளங்குகின்றார்.

—ஆசிரியர்.

---

காவியக் கருங் கண்ணினள் கனித்
தொண்டை வாய்க்கதிர் முத்தநல் வெண்ணகைத்
தூவியம் பெடையன்ன நடைச்சுரி மென்குழலாள்
தேவியுந் திருமேனி யோர்பாகமாய்
ஒன்றிரண் டொருமுன் றேடுசேர்பதி
பூவிலந்தண னொப்பவர் பூந்தராய் போற்றுதுமே. (1)

கடல்வரையோ தமல்குகழி கானல்பானல்
கமழ்காழி யென்று கருதப்
படுபொருள் ஆறும் நாலும் ஊதாக வைத்த
பதியான ஞானமுனிவன்
இடுபறை யொன்றவத்தர் பியன்மேலிருந்தி
னிசையா லுரைத்த பனுவல்
நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளியுள்க
வினை கெடுத லாணை நமதே. (2)

—சம்பந்தர்.

# கத்தூரி மணக்கும் கரும்பு

**திரு. ம. அ. முருகேசன்,** பி.ஏ.,பி.எல்.
நீதிபதி, மதுரை மாநகராட்சி.

ஒரு நாட்டின் வளத்தை மிகுதியாக மேம்படுத்துவது அந்நாட்டின் விளைநிலங்களே. நாட்டின் இலக்கணத்தைச் சொல்ல வந்த வள்ளுவப் பெருந்தகை, ''தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் சேர்வது நாடு'' என்று தொடங்குகிறார். வயலும் வயலைச் சார்ந்த நிலமுமாகிய மருதத்தில்தான் உயிரினங்களுக்கு இன்றியமையாத உணவுப் பொருள்கள் பெரும்பாலும் விளைகின்றன. ஆற்று நீராலும், குளத்து நீராலும் வளம்படுத்தப்படும் மருத நிலத்தின் முக்கிய விளை பொருள்கள் நெல்லும், கரும்பும், வாழையும், மஞ்சளுமாம். இப்பொருள்கள் எல்லாமே சிறப்பு வாய்ந்தவைகள். அதிலும் கரும்புக்கு எத்துணையோ சிறப்புகள்!

கரும்பின் பின்னணியில் நிற்பது நீர்வளமும் உழவுத் தொழிலும். ஒரு நாட்டுக்கு அறிஞர்களும் படை வீரர்களும் எவ்வளவு அவசியமோ அதைவிட அவசியம் உழவர்கள். படைகள் முன்னேறிப் பாய்வது வயிறு நிறைந்த போதுதான். (The Army moved on its stomach). கோசல நாட்டில் சிறப்பைப் பாடத் தொடங்கிய கம்பர், அந்த நாட்டில் பலவகைப் பட்ட வாத்தியங்கள் மிகுதியாக ஒலித்தாலும், அந்த ஒலிகளெல்லாம் உழவர்கள் ஏர் ஓட்டும் போது வாயால் எழுப்பும் ஒலியில் அடங்கிப் போகின்றன என்கிறார்.

''மூக்கில் தாக்குறும் மூரிநந்தும், நேர்
தாக்கின் தாக்குறும் பறையும், தண்ணுமை
வீக்கின் தாக்குறும் விளியும்—மள்ளர் தம்
வாக்கின் தாக்குறும் ஒலியில் மாயுமே!''

என்பது கம்பர் வாக்கு.

தமிழ் மக்களால் தொன்று தொட்டுப் பேணி வளர்க்கப்பட்டு வருகிறது கரும்பு. கரும்பிலிருந்து பல தீஞ்சுவைப் பொருள்கள் தயாரிக்கப்படுகின்றன. கரும்பிலிருந்து சாறு பிழிவதற்குத் தமிழ் மக்கள் ஆயிரம், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இயந்திரம் கண்டு பிடித்து இருந்தனர். நாடு துறந்து வளம் புகுந்த இராமனுடன் மருத நிலங்களின் ஊடே சென்ற சீதை ''கருப்பேந்திரம் கண்டனள்'' என்கிறார் கம்பர்.

''அரிநர் கொய்வாள் மடங்க அறைநர்
தீம்பிழி இயந்திரம் பத்தல் வருத்த''

என்பது பத்துப்பாட்டு. தமிழ் மக்களுக்குக் கரும்பின் மீது தீராக் காதல். கரும்பையும் அதன் தீஞ்சுவையையும் பாடாத இலக்கியமே இல்லையென்று சொல்லலாம். கரும்பை உவமையாக்கிப் பாடுவது புலவர்களுக்குக் கை வந்த கலை. குழந்தையைக் கொஞ்சும் தாய், ''கட்டிக் கரும்பே!'' என்கிறாள். தலைவன் தலைவியை ''கரும்பே, தேனே'' என்று நலம் புனைந்துரைக்கிறான். தலைவியின் குதலை மொழி தலைவனுக்குக் கருப்பஞ்சாறாக இனிக்கிறது. ''கரும்பு கசக்கும் மொழி கற்றாள்'' என்று பிரபுலிங்க லீலையில் மாயையை வருணிக்கிறார் சிவப்பிரகாச சுவாமிகள். ''தீங்கரும்பின் தித்திக்கும் இன்சொலாள்'' என்று கம்பரும் மகளிரை வருணிக்கிறார். எங்கள் கொங்கு நாட்டில், பெண்களுக்குக் ''கரும்படு சொல்லி'' என்று பெயர் வைப்பது உண்டு. உயிரினங்களுக்கெல்லாம் பொதுவான காமன் (மன்மதன்) கையிலிருப்பதும் கரும்பு வில் தானே. மலர் அம்பு எய்து உயிர்களைக் காதல் வயப்படுத்தப் பூவுடன் கூடிய கரும்பை விடப் பொருத்தமான பொருள் வேறென்ன இருக்க முடியும்?

ஏதோ காவியச் சுவைக்கும் சிருங்கார ரசத்திற்கும், பொருளாதாரத்திற்குந்தான் கரும்பு என்பதில்லை. நீதி நூல்கள் பாடிய புலவர்களும் கரும்பை விடவில்லை. ''சொல்லப் பயன்படுவர் மேலோர் கரும்பு போற் கொல்லப் பயன்படும் கீழ்'' என்பது திருக்குறள். துறவையே வலியுறுத்திக் கூறிய சமண முனிவர்களும் கரும்பைவிட்டுவைக்கவில்லை. உடம்பைத் தக்க வழியில் புண்ணியச் செயல்களுக்குப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும்; அது தான் உடம்பு எடுத்ததின் பயன்; அப்படிப் பயன் படுத்திக் கொண்டால், அது மறுமைக்கு உதவும். அது எது போல என்றால், கரும்பாட்டி சாறு எடுப்பது போல. கரும்பாட்டி சாறு எடுத்தபின் கோது (சக்கை) தான் மிஞ்சும். அந்தக் கோது போன்றதுதான் இந்த உடல்.

''அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும் பயனும் ஆற்றவே கொள்க—கரும்பூர்ந்த
சாறு போல் சாலவும் பின் உதவி மற்றதன்
கோது போல் போகும் உடம்பு''
—நாலடியார்.

நற்செயலுக்காக உழைத்து உடம்பாலான அறப் பயனைப் பெற்றவர்கள் மரணம் நேரிட்டபோது உடம்பைக் குறித்து வருந்துவதில்லை. அது எது போல என்றால், அதிகாலை நேரத்தில் கரும்பை ஆட்டிச் சர்க்கரைக் கட்டியைச் செய்து கொண்டவர்கள், கரும்பு துரும்பாகித் தீயில் வேகும் போது, ''ஐயோ! கரும்பு போயிற்றே'', என வருந்த மாட்டார்கள் அல்லவா? அது போல,

''கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேம்கால் துயராண்டுழவார்
வருந்தி உடம்பின் பயன் கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவதிலர்.''

இதுவும் நாலடியார் தான். என்ன அருமையான உவமை. கவிதை கரும்பாக இனிக்கிறது பாருங்கள்!

இறைவனைப் பாடிய அடியார்களுக்கும் கரும்பு கரும்பு தான். திருக்கடவூரிலிருக்கும் இறைவன் அப்பரடிகளுக்கு ''கரும்பினில்கட்டி'' போலத் தித்திக்கிறர். திருவொற்றியூர்ச் சிவபெருமானைப் பட்டினத்தடிகள் ''ஒற்றிக் கடலருகே நிற்கும் கரும்பு'' ஆகக் காண்கிறர். சிவபெருமானை ''முக்கட் கரும்பு'' என்று பாடி இருக்கிறர் இன்னெருவர். யோக நெறியில் நின்ற திருமூலருக்கும் கூடக் கரும்பை விட மனமில்லை.

''கரும்பும் தேனும் கலந்ததோர் காயத்தில்
அரும்பும் அந்தமும் ஆகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்பும் கைத்தது தேனும் புளித்ததே.''

—திருமூலர் திருமந்திரம்.

இப்படி யெல்லாம் கரும்பு இனிக்கலாம். அந்தச் செங்கரும்பு தீங்கரும்பாக இன்சுவை பயக்கலாம். ஆனல் மணக்குமா? அதுவும் கஸ்தூரி போல் மணக்குமா? மணக்கும் என்கிருரே ஒருவர். அப்படிச் சொல்பவர் சாதாரண புலவரோ, கவிஞரோ அல்ல. பக்தி நெறியில் தவழ்ந்த பழம் பெரும் புலவர் —இறைவனின் திருவிளையாடல்களை விதந்து பாடிய பரஞ்சோதி முனிவர்.

திக்கெல்லாம் சீர் மணக்கும் திருநெல்வேலிச் சீமையை வளப்படுத்துவது தண் பொருநை என்னும் தாமிரபரணி ஆறுகும். அது தமிழ் முனி வதியும் பொதிகையிலே பிறந்து, அங்குள்ள சந்தன மணத்தை வாரிக் கொண்டு நெல்லைச் சீமையிலே ஓடுகிறது. கரையின் இருமருங்கிலும் உள்ள ஊர்களிலும் நகரங்களிலும் உள்ள மகளிர் அந்நதியில் நீராடுகின்றனர். அப்படி நீராடுகையில் அம்மகளிர் தம் உடலில் பூசிய குங்குமமும் சந்தனமும் கஸ்தூரியும் அந்நதியிலே கலந்து விடுகின்றன. நதியின் நீரே சந்தனமும் கஸ்தூரியும் மணக்கிறது. அந்த மணத்துடன் கரையின் மருங்கிலுள்ள வயல்களுக்கும் பாய்கிறது. பாய்ந்து செந்நெல்லையும் கரும்பையும் விளைவிக்கிறது. அப்படி விளைந்து நெல்லும் கரும்பும் கஸ்தூரி மணக்கிறதாம். என்ன அருமையான கற்பனை! இதோ பாருங்கள் பாடலை . . .

''வளைந்த நுண்ணிடை மடந்தையர்
வனமுலை மெழுகின்
களைந்த குங்குமக் கலவையும்,
காசறைச் சாந்தும்,
விளைந்த தென் திரைப் பொருநையோ?
அந்நதி ஞாங்கர்
விளைந்த செந்நெலும் கன்னலும்
வீசும் அவ்வாசம்!

(பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம், மதுரைக் காண்டம்).

(காசு : கஸ்தூரி; ஞாங்கர்—பக்கம்).

பார்த்தீர்களா! கரும்பிலே கஸ்தூரி மணம் வீசுகிறது. கரும்பிலே மட்டுமா கஸ்தூரி மணக்கிறது! பாடலிலுந் தான்!



*தமிழக அரசின் சுற்றுலா வளர்ச்சி வாரியத்தினர் மதுரையில் நிகழும் சித்திரைத் திருவிழாவினை முன்னிட்டு நடத்திவரும் பொருட்காட்சியில், அமைந்துள்ள அறநிலையத் துறையின் அரங்கிற்கு, திரு. எம். கே. பாலசுப்பிரமணியம், I.A.S., அவர்கள் வருகை தந்து பார்வையிடுதல். (22-4-'78)*

# அரும்பெறல் மரபிற் பெரும்பெயர்

[ந. ரா. முருகவேள், M.A., M.O.L.]

## முன்னுரை

'அரும்பெறல் மரபிற் பெரும்பெயர்' என்னும் அழகிய தொடர், திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் அருளிச் செய்தது; பெயர்களின் சிறப்பை நயமுற விளக்குவது. ''பெயரில் என்ன இருக்கிறது? 'நிலத்தாமரை' (Rase) என வழங்கப்பெறுவதனை, நாம் வேறொரு பெயராற் குறிப்பிடினும், அஃது இனிய நறுமணமே கமழும்'' என ''ரோமியோவும் ஜூலியத்தும்'' என்னும் நாடகத்தில், செகப்பிரியர் பாடுகின்றார். ஆயினும் சிலசில பெயர்களுக்கு ஏதோ ஒரு தனிப் பெருமை இயல்பாக அமைந்து விடுகின்றது! அவற்றினையே நாம் மந்திரங்கள் எனப் பெரிதும் போற்றுகின்றோம்.

காந்தியடிகள் எல்லாச் சமயங்களையும், எல்லாக் கடவுளரையும் சமநோக்குடனேயே அன்புடன் போற்றிப் பாராட்டி வந்தனராயினும், அவருக்கு இராமன் என்னும் நாமத்தில் இயல்பாகவே ஒருவகைப் பற்றுதல் இருந்தது! பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெருமானையே, ''சிவன் எனும் நாமம் தனக்கே யுடைய செம்மேனி அம்மான்'' எனத் திருநாவுக்கரசர் சிறந்தெடுத்து உரைக்கின்றார்: ''சிவன் எனும் ஓசை அல்லது உலகில் திருநின்ற செம்மை யுளதே?'' எனவும் வியந்து வினவுகின்றார். ஆசிரியர் நக்கீரரோ, முருகனை ''அரும்பெறல் மரபிற் பெரும் பெயர் முருகன்'' எனப் பாடிப் பரவுகின்றார்!

## பெயரின் முதன்மை

பெயர்களுக்குள்ள பெருமை பெரிது! வினைச்சொற்களை ''இலக்கண ஆசிரியர்களின் படிமம்'' (Grammarians' idol) என ஓர் அறிஞர் (R. B. Ballard) குறிப்பிடுகின்றார். அம்முறை பற்றிக் கூறலுறின், பெயர்ச் சொற்களை, 'இலக்கண ஆசிரியர்களின் தெய்வம்' (Deity) என்றே கூறலாம். ஒரு மொழியில் பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லுமே உயிர்ப்புடைய பகுதிகள் என்பது மொழிநூலோர் (Philologists) கருத்து. ஆதல் பற்றியே, ஆசிரியர் தொல்காப்பியனார் ''சொல்லெனப் படுப பெயரே வினை என்று, ஆயிரண்டென்ப அறிந்திசினோரே'' என மொழிந்தருளினர். அவர் வினைச் சொற்களினும் பெயர்ச் சொற்களுக்கே முதன்மை தந்துள்ளமை கருதற்பாலது.

ஒவ்வொரு பெயர்களிலும் தனித்தனியே ஒரு குறிப்பிட்ட பண்பு இருப்பதாகப் பழங்கால மக்கள் நம்பி யிருந்தனர். தாம் அடைய விரும்பும் பண்புகளுக்கு ஏற்ற பெயர்களை வைத்துக் கொள்ளும் பழக்கம், இன்றும் மக்களிடையே இருந்து வருகின்றது. ஒருவரின் பெயரை மற்றொருவர் வைத்துக் கொள்வதனுல், அவரது பண்புகளைத் தாமும் பெறலாம் என மக்கள் கருதினர். அதனுல் பாட்டனின் பெயரைப் பேரனுக்கு வைத்து வழங்கும் பழக்கம், உலகெங்கணும் தொன்றுதொட்டுப் பல மொழியாளரிடையிலும் பயின்று வந்துள்ளதென ஆட்டோ எஸ்பர்ஸன் (Otto Jespersen) என்னும் அறிஞர் விளக்குகின்றார். கடவுளரின் பெயர்களை வைத்து வழங்குவதும் இக்கருத்துப் பற்றியே. சிலசில மக்கட் குழுவினருள் தத்தம் தலைவனின் பெயரை மற்றவர்கள் வைத்துக் கொள்ளக் கூடாது எனத் தடைகளும் விதிக்கப்பட்டிருந்தன. தலைவன் மாறுந்தோறும் பெயர்களைப் பற்றிய தடைவிதிகளும் அவர்களிடையே மாறிக்கொண்டு செல்லுமாம். பெயர்களுக்கு ஒருவகை மந்திர சக்தி இருப்பதாகப் பழங்கால மக்கள் உறுதியாக நம்பி யிருந்தனர். தம்முடைய பெயரை மற்றவர்கள் தெரிந்து கொண்டால் அதனைக் கொண்டு தமக்கு ஏதேனும் தீங்கு விளைவித்து விடுவார்கள் என்ற பயம் பண்டைய நாளில் இருந்தது. ''ஊரைச் சொன்னுலும் பேரைச் சொல்லாதே'' என்று இன்றும் வழங்கி வருவதை நாம் கேட்கின்றோம்.

## பெயரிடும் முறைகள்

ஒருவருக்குப் பெயர் இடுவதிற் பலதிற வகைகள் உண்டு. வறுமையினுல் வாடும் பெற்றோர்கள் தம் குழந்தையாவது வறுமையின் கொடுமையில் இருந்து தப்பி வாழ்தல் வேண்டும் என விரும்பிச் 'செல்லப்பன்' 'கோடீசுவரன்' எனப் பெயர்கள் வைப்பதுண்டு. இங்ஙனம் வைக்கப்படும் பெயர்கள் அதற்கு மறுதலையாக முடிவதும் இயல்பே. அதனை விளக்குதற்கு இனிய நல்ல எடுத்துக்காட்டு 'உமாயூன்' என்னும் மொகலாய அரசனின் பெயராகும். 'உமாயூன்' என்றுல் அதிருஷ்டசாலி என்பது பொருள். ஆயினும் அவரைப் போன்று தீயூழ் வாய்ந்த அரசர்கள் மிகச் சிலரேயாவர்.

ஒரு சில பெற்றோர்கள் தம் குழந்தைகளுக்கு நேர்ந்த பிறவிக் குறைபாடுகள் குறித்து

வருந்தி, அவற்றின் நிறைவையுணர்த்தும் பெயர்களை வைத்துப் பரிவுடன் வழங்குவர். கண்ணிற் பழுதடைந்த தமது பிள்ளைக்குக் 'கண்ணப்பன்' எனப் பெயர் வைத்தார் ஒரு சைவத் தமிழ்த் தந்தையார்! நோயினால் மெலிந்து வருந்தும் தம் குழந்தை உடல்நலம் பெருகி வாழ்தல் வேண்டும் என விரும்பி, ஆரோக்கியசாமி என்று அன்புடன் பெயர் அமைப்பர் சில பெற்றோர்கள். இங்ஙனம் பலமுறைகள் உண்டு. அதிவீரராமபாண்டியன்-வரதுங்கராமபாண்டியன் ஆகிய இருவருக்கும் ஆசிரியராகத் திகழ்ந்தவரும், பரங்கிரிப் புராணம் பாடியவரும், சிவஞானசித்தியார் சுபக்கம், திருவருட்பயன் என்னும் சைவ சித்தாந்த நூல்களுக்கு உரை வரைந்தவரும் ஆன நிரம்ப அழகிய தேசிகர், இத்தகையதோர் எதிர்மறை இலக்கணை முறையில், (Lacus a nonlucendo) ''நித்த மணாளர் நிரம்ப அழகியர்'' என்னும் திருவாசகத் தொடரால் பெயரிடப் பெற்றவரேயாவர் என்று சான்றோர்கள் கூறுவர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், கல்வியறிவு சிறிதும் பெறாத திண்ணனாரைக் ''கலைமலிந்த கண்ணப்பர்'' எனவும் கண்ணொளியிழந்தவராய் இருந்த தண்டியடிகளை ''நாட்டமிகு தண்டி'' எனவும், சூழ்ச்சியினாற் கொலையுண்டு தோல்வி எய்திய மெய்ப்பொருள் வேந்தரை ''வெல்லுமா மிக வல்ல மெய்ப் பொருள்'' எனவும் சிறப்பித்துப் போற்றியிருக்கும் திறமும், பிறவும் ஈண்டைக்கு உணரத்தகுவனவாம்.

பெயர்களுக்கும், அவை குறிக்கும் பொருள்களின் தன்மைக்கும் ஏதோ ஓர் இயைபு உண்டு என மக்கள் நம்பினர். செயிண்ட் தாமஸ் அக்வினஸ் என்பவர், பொருள்களின் இயற்கைத் தன்மைகட்கு ஏற்பவே அவற்றின் பெயர்கள் இருத்தல் வேண்டும் (''The names must be in accordance with the nature of things'') என வலியுறுத்திக் கூறுவார். அஃது இந்நாளிற் பெரும்பாலும் பொருந்தி வரவில்லை. ஆயினும் புகழனார், மாதினியார், மருள்நீக்கியார், புனிதவதியார், திலகவதியார், அருண்மொழித்தேவர் போன்ற பழந்தமிழ்ப் பெயர்கள், அவர்களின் இயல்பான சிறந்த பண்புகளுக்கு ஏற்ப அமைந்து திகழ்ந்தமை கருதற்பாலது.

### தற்காலச் சான்றோர்கள்

இறைவனின் பெயரையே யன்றி, அவன்றன் அருளுக்குரிய சான்றோர்களின் பெயர்களையும், நம் பிள்ளைகளுக்கு வைத்து வழங்கி வருதல், பெருநலம் பயப்பதாகும். ஈசூர்ச் சச்சிதானந்தசுவாமிகள் என்னும் சான்றோரின் பெயரினையே தமக்குத் தம் தந்தையாரால் இடப்பெற்று, அவ்வாற்றால் அவர்போலவே சமய வுணர்வில் தலைசிறந்து விளங்கி வந்தவர், சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் ஆவர். திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் நினைவாகத் தமக்கும் அவர் பெயரே இடப்பெற்று, அப்பெயரிடப் பெற்ற பெற்றிமைக்கு ஏற்பத் தமிழறிஞர் உலகில் தலைசிறந்து விளங்கி, மதுரைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்குத் துணை வேந்தராகவும் நியமிக்கப் பெற்ற மாட்சிமையுற்றுத் திகழ்ந்தவர், பேராசிரியர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்! சைவசித்தாந்த சண்டமாருதம் எனப் பெரும் புகழ் வாய்ந்து விளங்கிய சீலத்திரு. சோமசுந்தர நாயகர் அவர்களைப் போலவே, இக்குழந்தையும் சிறந்து விளங்கித் திகழ்தல் வேண்டும் என விரும்பிப் பெயரிடப் பெற்று, அங்ஙனமே பிற்காலத்தில் கலைபலவும் பயின்று நலம்பலவும் அமைந்து சிறந்து விளங்கியிருந்தவர், பேராசிரியர் திரு. ச. சோமசுந்தர பாரதியார்!

சான்றோர்களின் திருப்பெயர்களை, அவர்தம் பண்பு நலங்களின் சிறப்பறிந்து வியந்து, அவ்வுணர்வு நலம் உள்ளத்தே அழுந்தித் தோன்றப் பிள்ளைகளுக்குப் பெயர் வைத்து வழங்கி, அவ்வுணர்வையும் செவ்விதின் முறையாக வளர்த்து வந்தால், அப் பிள்ளைகளும் பிற்காலத்தில், அச்சான்றோர்களின் குணநலங்களில் ஒரு சிறிதேனும் அடையப் பெற்றுச் சிறந்து விளங்குவர் என்னும் உண்மையையுணர்தற்கு, இன்னோரன்ன பெருமக்களின் வாழ்க்கை வரலாறுகள், சான்று பகர்தல் காணலாம்.

### பெயர் அறியும் ஆர்வம்

மேலும், ஒரு பொருளின் பெயரைத் தெரிந்து கொள்வது, அப்பொருளைப் பெறுதற்கும், அதன்மீது ஆட்சியுரிமை செலுத்துதற்கும் வாய்ப்பளிக்கும் ( To know the names of things, in fait, is to hold them in one's power.) என மனிதமனம் முன்னாளில் கருதியது. பொருள்களின் பெயர்களை அறிந்து கொள்ளும் வேட்கையானது, பொதுவாக இன்றும் எல்லா மக்களிடையிலும் இயற்கையாக அமைந்து கிடப்பதனை நாம் பலதுறைகளிலும் காணலாம். ''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்'' எனவும், ''....பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே'' எனவும், ''இன்னும் பாடுக பாட்டே! அவர் நன்னெடுங்குன்றம் பாடிய பாட்டே!'' எனவும் தமிழிலக்கியங்களில் வரும் பலப்பல பாடல்கள் இவ்வுண்மைக்குச் சான்று பகரும். ஆர்லண்டோ என்பவன், ரோசலிண்ட் என்னும் தன் காதலியின் பெயரை, காட்டில் உள்ள மரங்களில்லெலாம் செதுக்கி வைத்த (As you Like it) கதையினை நாம் நன்கறிவோம்.

திருவாரூர்ப் பூங்கோயிலில் ''கற்பகத்தின் பூங்கொம்போ! காமன்றன் பெரு வாழ்வோ!'' எனத் தக்க ஓர் அம்மையாரை நற்பெரும் பான்மை கூட்ட நம்பியாரூரர் காண்கின்றார்; 'என் மனங்கொண்ட இவ்விளங்கொடிதான் யார்?'' என வினவுகின்றார். அதற்கு அன்று அங்கு அவர் முன் நின்றார் ''அவர், நங்கை பரவையார்'' எனக் கூறினர். பரவையார் என்னும் பெயரைக் கேட்ட அளவிலேயே, நம்பியாரூரர் நனிமிக மகிழ்ந்தார். பரவை-பரவை என அப்பெயரையே பலகாற் சொல்லிச்

சொல்லி இன்புற்று, அவ்வம்மையாற்பாற் கழிபெருங் காதல் கொண்டார். சுந்தரர் கொண்ட காதலுணர்வின் மனநிலையினை, ஆசிரியர் சேக்கிழார் அழகோவியமாகப் புனைந்து நமக்குக் காட்டுகின்றார்.

''பேர்பரவை! பெண்மையினில்
பெருஉம்பரவை விரும்பல்கு
லார்,பரவுஜ! அணிதிகழும்
மணிமுறுவல் அரும்பர்அவை!
சீர்பரவை ஆயினள்!
திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை! இடைப்பட்ட
என்ஆசை எழுபரவை!''

எனவரும் பெரியபுராணச் செய்யுள், அவர்தம் காதல் மனநிலையைக் கவினுறப் படம்பிடித்துக் காட்டுகின்றது! பரவை என்னும் பெயரினைச் சுந்தரர், பலகாற்கூறிப் பரவசம் அடைந்து மகிழ்ந்தமையினை உள்ளவாறுணர்த்த, இச் செய்யுளில் பலமுறை 'பரவை' என்னும் சொல் திரும்பத் திரும்ப வருமாறு சேக்கிழார் திறம் படப் பாடியிருக்கும் சிறப்பு, மிகவும் போற்றற் பாலது. அதுபற்றியே மகாவித்துவான் மீனட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள், இப்பாட்டில் பரவை என்னும் சொல் ஏழுமுறை வந்திருத்தலை எண்ணிப்பார்த்து இன்புற்று, 'ஒரு தூக்கில் எழுகடல் நிறுத்தோன்' என இரட்டுற மொழி தலாகச் சேக்கிழாரைப் பாராட்டிப் புகழ்ந் தார்.

## பெயரும் நட்பும்

இனி, நட்புணர்வின் உரிமை மிகுதியால் நண்பனின் பெயரையே தம் பெயராகக் குறித்துக் கொள்ளுகின்ற அன்புரிமைத்திறம் விளக்கும் வியத்தகு செய்தியும்,

''இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்
புகழ்கெட வருஉம் பொய்வேண் டலனே!
தன்பெயர் கிளக்குங் காலே, 'என்பெயர்
பேதைச்சோழன்!', என்னும் சிறந்த
காதற் கிழமையும் உடையன்!''

எனவரும் புறநானூற்றுப் பாடலாற் புலனு கின்றது. இத்தகு நட்பின் அருமைப் பெற்றி யினை நினைக்குங்கால், ''அண்டமோர் அணு வாம் பெருமை கொண்டு, அணுவோர் அண்ட மாம் சிறுமை கொண்டு, அடியேன் உண்ட ஊன் உனக்கு ஆம்வகை எனது உள்ளம் உள்கலந்து எழு பரஞ்சோதி'' என்னும் திருவிசைப்பா, நம்மனோர் நினைவிற்கு இயைபுபற்றிப் போந்து இன்புறுத்துகின்றதன்றோ?

இவ்வாறே மற்றொரு செய்தியும் இங்கு உணரத்தக்கது. பிற்காலச் சோழ வேந்தர் களுள் முதலாம் குலோத்துங்கன் (கி.பி. 1070-1120), மிகவும் சிறந்தவன். அவனுக்குப் 'பண்டித சோழன்' என ஒரு பெயர் உண்டு. அவனது அன்பிற்கும் நண்பிற்கும் உரியவராக விளங்கிய புலவர்களுள் செயங்கொண்டார் என்பவர், ஒருவர். குலோத்துங்கன் கலிங்கப் போர் நிகழ்த்தி வெற்றி பெற்று மகிழ்ச்சி யுடன் இருந்தபோது, அவனை அப்புலவர் காணச் சென்றார். அவரைக் கண்டு மகிழ்ந்த குலோத்துங்கன், 'இப்போது யானும் உம்மு டைய பெயரைப் பெற்றுவிட்டேன். எனக்கும் செயங்கொண்டான் (வெற்றி பெற்றவன்) என்ற பெயர் உரியதாகி விட்டது' என்று நயம்படக் கூறித் தன் அன்பை அவருக்குப் புலப்படுத்தினன். அவன்றன் நயவுரைக்கு மகிழ்ந்த புலவர், 'அங்ஙனமாயின் செயங் கொண்டான் என்னும் அரசர் ஆகிய தங்கள் வெற்றித் திறனைச், செயங்கொண்டான் என் னும் புலவன் ஆகிய யான், புகழ்ந்து பாடக் கடமைப் பட்டுள்ளேன்' என்று கூறினர். அதன் விளைவே கலிங்கத்துப்பரணி என்னும் நலஞ்செறிந்த நூல் என்பது வரலாறு. இனைய பல செய்திகள், பெயர்களின் அருமையையும் உரிமையையும் விளக்கும் பெற்றியினவாதல் காணலாம்.

## பழந்தமிழ்ப் பெயர்கள்

சங்க காலப் புலவர்களின் பெயர்க் கார ணங்களை ஆராய்ந்தால், பலதிறச் சுவைமிக்க கருத்துக்களை நாம் அறிந்து மகிழலாம். தமிழ்ப் பேரறிஞர் சாத்தூர்க் கந்தசாமி முதலியார் அவர்கள், உயிரின் இலக்கணம் விளக்கும் கருத் துடன், ''ஐயூர் மூலங்கிழார்'' என்னும் சங்க காலப் புலவரின் பெயரைத் தற்குறிப்பேற்ற மாகத் தலைப்பெய்து, ஆன்மாவுக்கு வழங்கி யுள்ளார். ஆன்மாவானது அன்னமயம், பிராண மயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்த மயம் என்னும் பஞ்சகோசங்களைக் கொண்டு விளங்குகின்றது. ஆதலின், அவ்வுண்மையினைச் சுவைமிகக் குறிப்பிடும் முறையில், சங்ககாலப் புலவர்களுள் ஒருவரின் பெயரினை எடுத்து, ஆன்மாவை ஐயூர் மூலங்கிழார் என வழங்கி மகிழ்கின்றார் அவர்! இந்நாளில் 'சுலோசனா' என வழங்கும் பெயர்க்கு ஏற்ற, இனிய தமிழ்ப் பெயராக 'நக்கண்ணை' என்னும் சங்ககாலப் பெண்பாற் புலவர் ஒருவரின் பெயர் விளங் கியது.

இம்முறையில் ஏகாம்பரநாதர்-காமாட்சி யம்மை என இந்நாளில் வழங்கிவரும் திருப் பெயர்களையே சங்ககாலப் புலவர்களின் பெயர்கள் ஆகிய மாமூலனார்-காமக்கண்ணி யார் என்னும் சொற்கள் பொருத்தமுறக் குறிப்பிடுகின்றன , என்று நினைத்துணரும் பொழுது, நமக்கு எத்துணைப் பெரிய இன்பம் உண்டாகின்றது. அங்ஙனமே மீனாட்சியம்மை என்னும் திருப்பெயரினையே, கயற்கண்ணி எனக் கவின்மிகு தமிழில் ஞானசம்பந்தர்.

அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே''

என்னும் தேவாரப் பாடலில் தெளிவுறக் குறித் துள்ளார். மணிவாசகர் ''கயல்மாண்டகண்ணி' என்கின்றார். இதனைச் சிந்தித்துணருங்கால் நம் சிந்தை களிக்கின்றதன்றோ? பரஞ்சோதி முனிவர் மீனாட்சியம்மை என்பதனை 'மீன நோக்கின் மடவரல்' என்றும், சிவகாமவல்லி

என்பதனைத் 'தன் ஆனனத்தக்கொடி' என்றும் தமிழாக்கிக் குறிப்பிட்டுள்ளமையும் ஈண்டு அறிந்து கொள்ளத்தக்கது.

## பெயர் விளக்கம்

தமிழ் நூல்களுள் கலித்தொகை என்பது ஒரு சிறந்த நூல். 'கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகை' என அது புகழப்பெற்றுள்ளது. சங்ககால நூல்களைச் சேர்ந்த அதன்கண், திருதராட்டிரன் என்னும் பெயர் குறிக்கப் பெற்றுள்ள முறை, மிகவும் சுவை வாய்ந்தது. திருதராட்டிரன் குருடன். ஆதலின் அவனை மற்றவர்கள் காண முடியுமே யன்றி, அவன் மற்றவர்களைக் காண இயலாது. அவன் ஒருவகையிற் கண்ணாடி போன்றவன். கண்ணாடியை மற்றவர்கள் காணமுடியுமேயன்றி, அது மற்றவர்களைக் காணவல்லதன்று, இவ்வியல்பு விளங்கத் திருதராஷ்டிரனுக்கு முகுரானனன், தர்ப்பணனனன் என்று பெயர்கள் வழங்கும். ('முகுரம்-கண்ணாடி. தர்ப்பணம்-கண்ணாடி. ஆனனம்-முகம்). கண்ணாடி தன் முன்வரும் பொருளின் உருவினை மருவக் காட்டிடும் ஒளியுடைய பொருள் ஆதலின், அதனைத் தமிழில் 'வயக்குறு மண்டிலம்' என்பர். எனவே, கபிலர் எனும் சங்க காலப் புலவர்,

> 'வயக்குறு மண்டிலத்து
> வடமொழிப் பெயர்பெற்ற
> முகத்தவன் . . .''

எனத் திருதராட்டிரனைக் குறிப்பிட்டருள்கின்றார். இம்முறையினை ஒட்டி, கிரவுஞ்ச மலையை அழித்தமுருகனைப் பரிபாடல் என்னும் சங்க கால நூல் 'குருகு பெயர்க் குன்றம் கொன்றோன்' என வழங்குகின்றது. கம்பர் 'அசகாய சூரன்' என்பதனைக் 'கூட்டொருவரை வேண்டாக் கொற்றவன்' எனப் பாடியுள்ளார். இவை போன்ற பெயர் வழக்காறுகள் ஆராயுந்தோறும் எத்துணை இலக்கியச் சுவை பயக்கின்றன.

## பெயரின் ஆற்றல்

பெயருக்குள்ள இத்தகைய பெருமைகளையெல்லாம் விளக்குதற்கே, அதன் ''அரும் பெறல் மரபிற் பெரும் பெயர்'' எனச் சான்றோர் பண்டே அதனைச் சிறப்பித்துரைத்தனர் போலும்! ஜே. வெண்ட்ரியே என்னும் மொழி நூலறிஞர், பெயர்ச்சொற்கள் பற்றி விளக்கி வருங்கால், நோயின் கூறுகளை நுனித்தாய்ந்து அதன் பெயர் இன்னது எனத் தெளிந்து, மருத்துவர் ஒருவர் கூறிவிட வல்லுநராயின், அஃதொன்றே நோயாளியின் அச்சமும் கவலையும் நீக்கி ஆறுதல் அளித்து நோயைப் போக்கிவிடக் கூடும் என்கின்றார். *இக்கருத்தை மெய்ப்பிக்க அதர்வண வேதத்திலிருந்து மேற்கொள் ஒன்றையும் அவர் காட்டுகின்றார்.

## நாம மந்திரம்

இஃதொருபுறம் இருப்பச், சில சமயங்களில் நோயாளிகளின் நோய் தணியப் பிறவற்றைக் காட்டிலும், மருத்துவர்களின் பெயர்ப் பெருமையும், சிறந்ததொரு காரணமாக அமைகின்றது என்பதனையும், நாம் பலகாற் கண்டுணர்ந்து வருகின்றோம். அவ்வுண்மையினை ஆசிரியர் சேக்கிழார் பெருமான் ஓரிடத்திற் செவ்விதின் உணர்த்தியருள்கின்றார். கூன் பாண்டியன் வெப்புநோய் கண்டு வருந்துகின்றான். சமணர்கள் மருங்கு சூழ்ந்து, நோயின் மூலகாரணம் அறியாமல், 'காவாய் அருகனே!' என்றென்றோதி, மருத்துவங்கள் புரிகின்றனர். ஆயினும் நோய் சொரிந்த தழல்போலப் பாண்டியனின் வெப்புநோய் மிகுகின்றதே யன்றித் தணியவில்லை. அதனால் அவர்களை நோக்கி அரசன் ''ஒருவரும் இங்கு இருமருங்கும் இராது போம்'' எனச் சினந்து மொழிந்து உணர்வு சோர்ந்து விழுந்தான். அந்நிலையிற் குலச்சிறையார்.

> ''காயமும் மனமும் மாசு
> கழுவுதல் செய்யார் செய்யும்
> மாயமும் இந்த நோயை
> வளர்ப்பதே! வளர்வெண் திங்கள்
> மேய வேணியர்பால் ஞானம்
> பெற்றவர் விரும்பி நோக்கில்
> தீயஇப் பிணியே அன்றிப்
> பிறவியும் தீரும் என்றார்.''

உணர்வு சோர்ந்து உயிர் தடுமாறும் பாண்டியனின் செவிகளில், சிறந்த ஒரு மருத்துவரின் பெயரை மெல்லெனச் சொல்லியவுடனே, அது கேட்ட அளவில் அவன் சோர்வு நீங்கி உணர்வு பெற்று இன்புறுகின்றான். நோயின் கொடுமையும் ஓரளவு தணிகின்றது. இந்நிலைமையினை,

> ''மீனவன் செவியின் ஊடு
> மெய்யுணர் வளிப்போர் கூற,
> ஞானசம் பந்தர் என்னும்
> நாமமந் திரமும் செல்ல
> ஆனபே ரயர்வு தன்னை
> அகன்றிடப் பெற்றான்''

எனப் பெரிய புராணத்திற் சேக்கிழார் விளக்கிப் பாடியிருத்தல் காணலாம்.

## அருளாளர் பெயர்கள்

இங்ஙனமே திருநாவுக்கரசர், நம்பியாரூரர் என்னும் அருளாளர்களின் பெயர்களும், மந்திரச் சிறப்பும் ஆற்றலும் வாய்ந்தனவாக விளங்குகின்றன. அவைகள் தம்மை வழுத்திநரைக் காக்கும் பேராற்றல் மிக்க பெற்றிமை சான்றவை என்பது உணரற்பாலது. அப்பூதியடிகள் தவம் செய்யத் தலைப்படவில்லை. தீயிடை நின்று தியானிக்கவில்லை; வெறும் நீரை மட்டுமே உணவாகக் கொண்டு கடினமான விரதங்களைக் கடைப்பிடிக்கவில்லை. திருநாவுக்கரசு என்னும் பெயரை இடைவிடாமற்

---

* "To know the name of the evil is half the cure. Let us not smile at these primitive beliefs. They are still in force today, since we believe in the importance of the diagnosis when it is expressed in words. 'I suffer a great deal with my head, Doctor' — it is Cephalalgia! 'My digestion is bad'—it is Dyspepsia! In actual fact, the doctor is content to substitute for a usual and commonplace word that all his patients understand: they experience relief desired when they learn that the specialist knows by name the occult evil that causes their suffering." —J. Vendryes, Language.

கூறியும், எழுதிவைத்துமே, எய்தற்கரிய வீடு பேற்றை எய்தினர்.

உற்ருன் அலன்தவம்; தீயில் நின்ருன்
அலன்; ஊன்புனலா
அற்ருன் அலன் நுகர்வும்;
திருநாவுக் கரசு எனும் ஓர்
சொற்ருன், எழுதியும் கூறியுமே
என்றும் துன்பில்பதம்
பெற்ருன், ஒருநம்பி அப்பூதி
என்னும் பெருந்தகையே.

இவ்வாறே அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவரான பெருமிழலைக்குறும்பர் என்பவர், சுந்தரமூர்த்தி சுவாமிகளையே தம்முடைய கண்கண்ட தெய்வமாகக் கருதி வழிபட்டார். அவருடைய திருப்பெயர் ஆகிய நம்பியாரூரர் என்பதனையே மந்திரம் என்று கொண்டு வழுத்தினர். நம்பியாரூரர் என்னும் நாம மந்திரத்தினையே நயந்தினிது ஓதி, இடைவிடாமல் தியானித்து வழிபட்டார். அதனுல் அவர் அணிமா மதிமா கரிமா லகிமா முதலிய அட்டமாசித்திகளையும் அடையப் பெற்ருர். இறையருளுக்கு உரியவராய் வீடுபேறு எய்தினர்.

நாளும் நம்பி யாரூரர்
நாமம் நவின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி
சித்தி எல்லாம் அணைந்ததற்பின்
மூளும் காதல் உடன்பெருக
முதல்வர் நாமத் தெழுத்தஞ்சும்
கேளும் பொருளும் உணர்வுமாம்
பரிசு வாய்ப்பக் கெழுமினர்.

இன்னேரனைய செய்திகள் பலவும், அரும் பெறல் மரபிற் பெரும்பெயர்களின் மாண்பினை, மலையிலக்கெனத் தெளிவுறப் புலப்படுத்துகின்றமை காண்க.

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்ருல், பெயர்களுக்கு உள்ள சிறப்பும் ஆற்றலும்பற்றி, ஓரளவேனும் உணரலாம். பெயர்களின் ஆற்றலும் சிறப்பும் உணர்ந்தே, பெரியாழ்வார் தம்முடைய திருப்பதிகம் ஒன்றில், மக்களுக்குக் கடவுளரின் பெயர்களை வைப்பதுதான் மிகவும் சிறப்புடையது என்று வற்புறுத்திப் பாடியுள்ளார்.

காசும் கறையுடைக் கூறைக்கும்
அங்கோர் கற்றைக்கும்
ஆசையி ஞல்அங்கு அவத்தப்
பேரிடும் ஆதர்காள்
கேசவன் பேர்இட்டு நீங்கள்
தேனித்து இருமினே . . . *(381)*

மானிட சாதியில் தோன்றிற்ருேர்
மானிட சாதியை
மானிட சாதியின் பேரிட்டால்
மறுமைக்கு இல்லை . . . *(384)*

மண்ணிற் பிறந்து மண்ணுகும்
மானிடப் பேரிட்டு அங்கு
எண்ணம்ஒன் றின்றி இருக்கும்
ஏழை மனிசர்காள். . . *(387)*

நம்பி பிம்பி என்று நாட்டு
மானிடப் பேர்இட்டால்
நம்பும் பிம்பும் எல்லாம்
நாலு நாளில் அழுங்கிப்போம். . *(388)*

கடவுளின் திருநாமத்தைக் கற்ருல், நம்முடைய குற்றங்களெல்லாம் நீங்கும்; இழிவுகள் எல்லாம் ஒழியும். நம்மை அடக்கி ஆண்டுவரும் பொறிபுலன்களை, அடக்கி ஆளலாம். கலியின் கொடுமைகள் நம்மை நலியாதபடி, நாம் அவற்றை மிக எளிதாகக் கடக்கலாம். நாம் அஞ்சி நடுங்குதற்குரிய நமன் தமர்களும், நமக்கு அஞ்சி நடுங்குவார்கள். நாம் அவர்களின் தலைகள் மீது அடிவைத்து நடந்து, அவர்களை வெற்றிகொண்டு பெருமிதம் கொள்ளலாம். இவ்வுண்மையினை,

காவலிற் புலனை வைத்துக்
கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து
நாவலிட் டுழிதர் கின்ருேம்
நமன்தமர் தலைகள் மீதே;
மூவுலகு உண்டு உமிழ்ந்த
முதல்வ! நின் நாமம் கற்ற
ஆவலிப் புடைமை கண்டாய்
அரங்கமா நகரு ளானே!

எனவரும் தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பாடலும் வற்புறுத்துதல் காணலாம். ஆதலின் நாம் அனைவரும் கடவுளின் பெயர்களைப் பலகாற் கூறி வழுத்தியும், நம்முடைய மக்களுக்கு வைத்து வழங்கியும் மகிழ்ந்து, நலம்பல பெற்று உய்வோமாக!

ooooo—முற்றும்—ooooo

# சண்டேசுவரர்

[ சிவநேசன் ]

**முன்னுரை :**

சிவாலயங்களிற் பஞ்சமூர்த்திகள் புறப்பாடு அல்லது திருவீதி உலா நிகழும்போது, அவர்களுள் ஒருவராக விளங்குபவர் சண்டேசர் என்பது யாவரும் அறிந்ததொன்று. சண்டேசர் சண்டீசர், சண்டேசுவரர், சண்டிகேசர், சண்டேசுவர நாயனுர் எனப் பலவகைகளில் இவருக்குப் பெயர்கள் வழங்கும்.

எல்லாச் சிவாலயங்களிலும் இவருக்குத் தனியே ஒரு சிறு சந்நிதி உண்டு. அது கருவறைக்குப் புறம்பே, அபிடேகத்தீர்த்தம் விழும் கோமுகியை அடுத்து, அருகில் அமைக்கப்பட்டிருக்கும். கோயில்களுக்குச் சென்று நாம் செய்யும் சிவதரிசனமும் வழிபாடும், அவற்றின் இறுதியில் நாம் செய்தற்குரிய சண்டேசுவரர் தரிசனத்துடனும் பிரார்த்தனையுடனுமே நிறைவு பெறுகின்றன. சண்டேசுவரரைத் தரிசனம் செய்து முடிக்காதபோது, சிவதரிசனம் நிறைவு பெருமையோடு, அதன் பயனும் நமக்குச் சித்திப்பதில்லை என்பது பெரியோர்கள் துணிபு.

திருக்கோயிலுக்குச் சென்று சிவபிரானை வழிபடும் அன்பர்கள், கோயிலை முறையே வலம் வந்து, ஒவ்வொரு மூர்த்தியையும் வணங்கி முடித்துக் கொண்ட பிறகு, சண்டேசுவரர் கோயிலை அடைதல் வேண்டும். கோயிலில் வழிபாட்டின்போது பெற்ற பூமாலை பரிவட்டம் முதலிய சிவ நின்மாலியப் பொருள்களைச் சண்டேசுவரர் சந்நிதியிற் சேர்த்து, சிவ தரிசனப் பலனை அளித்தருளல் வேண்டும் என்று அவரைப் பிரார்த்தித்து, அங்குப் பெற்ற திருநீற்றை அணிந்து கொள்ளல் வேண்டும் என்பது சமய நூல்களின் விதி.

சிவபிரானுக்குச் சார்த்திய மலர் மாலைகள், ஆடை அணிகலன்கள் முதலியனவும், நிவேதனம் செய்த பிரசாதங்கள் ஆகிய உணவு வகைகளும், சிவ நின்மாலியங்கள் என வழங்கப்படும். சிவபிரானுல் ஏற்றுக் கொள்ளப்பட்டு, நின்மலம் (அழுக்கின்மை, தூய்மை) அடைந்த பொருள்கள், சிவ நின்மாலியங்கள் ஆகும்.

சிவ நின்மாலியங்களைச் சண்டேசுவரர் பால் சேர்ப்பித்தல் வேண்டும் என்று பெரியவர்கள் கூறும் நுட்பம் அறியாமையால், ஒரு சில மக்கள் கோயில்களில் சண்டேச மூர்த்தியின் முன்பு தமது ஆடைகளில் நூல் இழைகளை எடுத்துப்போடும் சிவாபராதச் செயல் புரிகின்றனர். அது பெரும் தவறு. சிவபிரானுக்கு அணிவித்து நின்மாலியமான ஆடைகளையும், மாலைகளையும் மட்டுமே, சண்டேசர்க்குச் சாத்துதல் வேண்டும். சண்டேசர் இடையருத சிவத்தியானத்தில் ஈடுபட்டிருப்பவராதலின், அவருக்கு நம் வருகையையும், வேண்டுகோளையும் தெரிவிக்கும் வகையில், ஓர் அறிகுறியாகவே, நாம் அவர்தம் திருமுன் சென்று நம் கைகளை மெல்லெனத் தட்டுகின்றேம்.

**திருவானைக்காப் புராணம் :**

சிவபூசையின் இறுதியில் நம்மாற் பூசிக்கப்பெற்று, சிவபிரானுல் ஏற்றுக் கொள்ளப்பட்ட அன்னம் (உணவு), பானம் (நீர்), மற்றும், தாம்பூலம், மாலை, சந்தனம் ஆகிய நின்மாலியங்களை ஏற்றுக்கொண்டு, நமக்குச் சிவ பூசையின் பயனைக் கொடுக்கும் அதிகாரமுடையவர் சண்டேசுவரரேயாவர். இவ்வுண்மையினைக் கச்சியப்ப முனிவர்,

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த
புனிதர்க் கமைக்கும் பொருளன்றி
மின்னும் கலன்ஆடைகள் பிறவும்
வேறு தனக்கென் றமையாமே
மன்னும் தலைவன் பூசனையில்
மல்கும் பயனை அடியார்கள்
துன்னும் படிபூசனைகொள்ளும்
தூயோன் அடித்தா மரைதொழுவாம்.

எனவரும் திருவானைக்காப் புராணத் துதிப் பாடலிற் குறிப்பிட்டிருத்தல் கொண்டு உணரலாம். சண்டேசர் பூசை செய்யாதவழி, சிவ பூசை செய்தும் அதன் பயனை நாம் எய்துதல் இயலாது, இது,

''சண்டனை அர்ச்சித்தவரே
சம்புவை அர்ச்சித்த பயன்,
கொண்டிடுவர் மற்றையர்
கொள்ளார்.''

எனவரும் சைவ சமய நெறித் திருமொழியால் உணரப்படும். அதுபற்றியே சைவ சித்தாந்தத்தில் ''சண்டேசுவரரை எவ்விடத்தும் எப்போதும் பூசிக்க'' என்னும் நியமம் உள்ளது.

## கல்வெட்டுச் செய்யுள் :

சிவாலயங்களின் வரவு செலவுக் கணக்குகளைச் சண்டேசுவரர் பெயரிலேயே எழுதுவதுதான், பண்டைக் காலத்து மரபு முறையாக இருந்து வந்தது. இம் மரபு நெறிச் செய்தியினைப் பின்வரும் கல்வெட்டு வெண்பாப் பாடல் விளக்குதல் காணலாம்.

சண்டேச் சுரன்ஓலை சாகரஞ்சூழ் வையகத்தீர்
கண்டேச் சுரன்கருமம் ஆராய்க!-பண்டே
அறஞ்செய்தான் செய்தான் அறங்காத்தான் பாதம்
திறம்பாமைச் சென்னிமேல் வைத்து.

''கடல் சூழ்ந்த உலகில் வாழும் மக்களே! நமக்கு முற்பட்டுப் பண்டைக் காலத்தில் அறத்தைச் செய்தவன், செய்வித்தவன், செய்த அறத்தைப் பாதுகாத்தவன் முதலியவர்களுடைய பாதங்களைப் பிறழ்வின்றி உங்கள் தலைமேற்கொண்டு போற்றி, இறைவனின் திருப்பணிகளை முறைப்படி ஆராய்ந்து செய்து வருவீர்களாக! இது சண்டேசுவரரின் ஆணை ஓலை (கட்டளை)'' என்பது மேற்குறித்த கல்வெட்டுப் பாடலின் பொருள்.

இக்கல்வெட்டுப் பாடல், மதுராந்தகம் வட்டம், பெரும்பேறு கிராமம் தான்தோன்றி ஈசுவரர் கோயிலின் முன்மண்டபத்துத் தெற்குச் சுவரிலும் (1); தஞ்சை மாவட்டம் தஞ்சாவூர் வட்டம் திருக்களாவுடைய மகாதேவர் கோயிலின் வடபுறச் சுவரிலும் (2); தென்னாற்காடு மாவட்டம் விழுப்புரம் வட்டம் திருவாமாத்தூர் அபிராமேசுவரர் கோயிலின் முன் பிராகாரம் தென்புறச் சுவரிலும் (3) ; புதுக்கோட்டை திருமெய்யம் வட்டம் கள்ளம்பட்டி மதீசுவரர் கோயிலின் முன்புள்ள ஒரு கல்லிலுமாகப் பல தலங்களில் செதுக்கப்பெற்றுள்ளது.

## அரனார் மகனார் :

சண்டேசுவரர், சிவபிரானுக்கு, மகன்மை முறைமையினராக ஆட்கொள்ளப் பெற்றவர் என்பதனை,

''வந்து மிகைசெய் தாதைதாள்
மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே
அரனார் மகனார் ஆயினார்''

எனவரும் பெரிய புராணச் செய்யுள் விளக்கும். சிவபிரானுக்குப் பிள்ளையாகும் பெருமை பெற்றமை பற்றியே, மூத்த பிள்ளையார் (விநாயகர்), இளைய பிள்ளையார் (முருகன்), காழிப்பிள்ளையார் (சம்பந்தர்) என வழங்கும் வரிசை முறையில் வைத்து, சேய்ஞலூர்ப் பிள்ளையார் எனச் சண்டேசுவரர் வழங்கப் பெறுகின்றார்.

## தொண்டர் நாயகர் :

சண்டேசுவரரே சிவனடியார்கள் அனைவருக்கும் தலைமை உடையவர் ஆவர். தொண்டர்களுக் கெல்லாம் தலைவராக விளங்கும் சிறப்புடைமை பற்றிச் சண்டேசுவரர்க்குத் 'தொண்டர் நாயகம்' என்னும் ஒரு பெயரும் உண்டு.

தாதையைத் தாளற வீசிய
சண்டிக்கிவ் அண்டத்தொடுமுடனே
பூதலத் தோரும் வணங்கப்
பொற்கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும்
நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

என்பது திருவிசைப்பாத் திருப்பல்லாண்டுப் பாடல். இங்ஙனம் அடியார்களுக்கெல்லாம் தலைவராகத் திகழ்தல் பற்றியே, அடியார்களின் சார்பாளர் (பிரதிநிதி) முறையில், இறைவனின் திருவீதியுலாவில் சண்டேசுவரரும் கலந்து எழுந்தருளிச் சிறப்பிக்கின்றார்.

## சண்டேசர் வரலாறு :

சோழ நாட்டில் மண்ணியாற்றின் தென் கரையில், சேய்ஞலூர் என்ற ஒரு சிவத்தலம் உள்ளது. சேய் ஆகிய முருகன், சிவபிரானை வழிபட்ட நல்ல ஊர் ஆதலின் சேய்ஞலூர் (சேய் நல் ஊர்) எனப் பெயர் அமைந்தது. அஃது அந்தணர்கள் நிறைந்து வாழும் ஊர்! சோழ அரசர்கள் முடிசூடிக் கொள்ளும் ஐந்து (காவிரிப்பூம்பட்டினம், உறையூர், திருவாரூர், சேய்ஞலூர், கருவூர்) தலைநகரங்களுள், ஒன்றாகத் திகழ்வது அது. அதன்கண் காசிப கோத்திரத்தில் எச்சதத்தன் என்ற மறையவன் ஒருவன் இருந்தான். ''அருமை மணியும் அளித்ததுவே நஞ்சும் அளிக்கும் அரவுபோல், இருமை விளைக்கும் ஒருவடிவாகியவன் அவன்''. அவனுடைய மனைவி பவித்திரை என்பவள். இவ்விருவருக்கும் விசாரசருமர் என்னும் மைந்தர் ஒருவர் வந்து உதயஞ் செய்தார். ''முந்தையறிவின் தொடர்ச்சியினால் முகைத்த மலரின் வாசம்போல்'' ஐந்தாண்டு நிரம்பும் முன்னரே, அவர் சந்த மறைகளும், ஆகமங்களும் தகவுற உணர்ந்து தெளிந்தார்.

ஒரு நாள் அச்சிறிய பெருந் தகையார், தாம் பள்ளிக்குச் செல்லுங்கால் வழியில் ஓர் இடையன் பசு நிரைகளை அடித்துக் கொடுமை செய்ததனைக் கண்டார். உள்ளம் வருந்தினார். பசுக்களின் அருமை பெருமைகளை அவனுக்கு எடுத்து அறிவுறுத்தி, ''யானே இனி இந்நிரை மேய்ப்பேன்'' என்று கூறி, அப்பசு நிரைகளை மேய்த்து வரத் தலைப்பட்டார்.

பசுக்கள் நன்கு புல் மேய்ந்து, மடி பெருகி முலை சுரந்து பால் கறந்து வந்தன. சேய்ஞலூர் மறையவர்கள் அனைவரும் மகிழ்ந்தனர். சில நாட்கள் சென்றன. பசுக்களுக்கு விசாரசருமர் பால் மிகவும் அன்பும் ஈடுபாடும் பெருகின. அவரைக் கண்டாலே, அவைகள் மிகவும் களிகொண்டு, அவர்தம் அருகுசார்ந்து, உருகி நின்றன. அன்பின் மிகுதியால் கனைத்துச் சுரந்து கறவாமே பால் பெருகிப் பொழிந்து நின்றன. பசுக்கள் பால்பொழிவது கண்ட விசாரசருமருக்கு, அஃது இறைவனுக்குத் திருமஞ்சனம் செய்யப் பயன்படுமே என்னும் குறிப்புத் தோன்றியது. ''முன்னை அர்ச்சனையின் அளவில் தொடர்ச்சியால்'' மூளும் அன்பு பெருகிய விசாரசருமர், மண்ணி ஆற்று மண

வில் சிவலிங்கமும், சிவாலயமும், கோபுரமும், திருச்சுற்றாலயமும் முதலியன வகுத்து, விளையாட்டே போலச் சிவாகம முறைப்படி சிவ பூசையில் ஈடுபடத் துவங்கிவிட்டார். சண்டேசர் ஆநிரை மேய்த்து ஆத்தி மரத்தின் கீழ்ச் சிவலிங்கம் தாபித்துப் பூசை செய்த தலமே, திருவாப்பாடி என இன்றும் விளங்கி வருகின்றது.

சிவ பூசை செய்யுங்கால், இவர் திருமஞ்சனம் ஆட்டும் செயலின் இயல்புணராத சேய்ஞலூர் மறையவர்கள், இவர் பசும்பாலைக் கறந்து வறிதே மண்ணிற் கவிழ்த்து வீண் ஆக்குகின்றார் என, எச்சதத்தன்பாற் சென்று குறை கூறினர். எச்சதத்தன் அதுகேட்டுச் சினந்து வந்து, அங்கு இருந்து ஒரு குரா மரத்தின் மீது ஏறி ஒளிந்திருந்து யாவற்றையும் கண்டான். விசாரசருமர் சிவபூசை செய்யும்போது, திருமஞ்சனக் குடப் பாலைக் காலால் இடறிச் சிந்தினான். அது கண்ணுற்ற விசாரசருமர் சிவத் தியானத்தில் அழுந்தித் தம்மை மறந்திருந்த நிலையில், அருகே கிடந்த ஒரு கோலை எடுத்து எறிந்தார். அக்கோலே அருளால் மழுவாக மாறி, எச்சதத்தனுடைய இரு கால்களையும் வெட்டி அவனைக் கீழே விழும்படிச் செய்தது. விசாரசருமர் பின்னரும் சிவவழிபாட்டிலேயே மனம் ஒன்றி நின்றார்.

அந்நிலையில் சிவபெருமான் வெளிப்பட்டு, பக்தி முதிர்ந்த பாலகனார் ஆகிய விசாரசருமர்க்குக் காட்சி கொடுத்தார். ''நம் பொருட்டால் ஈன்ற தாதை விழ எறிந்தாய். அடுத்த தாதை இனி உனக்கு நாம்'' என்று அருளிச் செய்தார். கருணையினால் அவரை அணைத்துத் தழுவி உச்சி மோந்து மகிழ்ந்தார். சிவபிரானின் திருமலர்க் கைகளால் தீண்டப் பெற்றமையால், விசாரசருமரின் மாயாமலயாக்கை, சிவமயமாகி ஒளிவடிவம் பெற்றது. அவர் திருவருளில் மூழ்கித் திளைத்தார்.

சிவபிரான் அவரைத் தம் தொண்டர்களுக்கெல்லாம் தலைவராக ஆக்கினார். ''எமக்கு நிவேதனம் செய்த பொருள்களும், யாம் உடுத்த ஆடைகளும், சூடிய மாலை முதலிய அணிகலன்களும் ஆகிய அனைத்தும், இனி நினக்கே உரிமையுடையது. யாம் நினக்குச் சண்டீசன் என்னும் பதம் தந்தோம்'' என்று கூறி, அதற்கு அடையாளமாகத் தம்து சடைமுடியினின்று கொன்றை மாலையினை எடுத்து விசாரசருமருக்குச் சூட்டித் திருவருள் புரிந்தார். அங்ஙனம் விசாரசருமர்க்குச் சிவபிரான் சண்டேசப் பதம் அளித்து அனுக்கிரகம் புரிந்த நிலையே ''சண்டேச அனுக்கிரக மூர்த்தம்'' எனப்படும்.

**காவியமும் ஓவியமும் :**

இம் மூர்த்தத்தின் இயல்பினை விளக்கும் அழகிய சிற்பங்கள், கங்கைகொண்ட சோழபுரம் கோயில், சிதம்பரம் நடராசர் கோயில், காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயில் முதலிய பல இடங்களில் காணப்படுகின்றன. இவற்றுளெல்லாம் கங்கைகொண்ட சோழபுரம் கோயிற் சிற்பமே, கண்கவர் கவினும் கவர்ச்சியும் மிக்குடையதாகத் திகழ்கின்றது.

காவியமும் ஓவியமும் தம்முள் மிகவும் தொடர்புடையன. 'கவிஞனும் ஓவியனும் தமக்குள் ஒருவருக்கொருவர் உள்ளுணர்ச்சிப் பெருக்கம் ஊட்டிக் கொள்வலுகின்றனர்.' *(The Poet and the Painter influence and inspire one another)* என்று அறிஞர்கள் கூறுவதுண்டு. கவிஞர்களின் கவிதைக் கருத்துக்களுக்கு ஓவியர்கள் சித்திரம் தீட்டுதலும், ஓவியர்கள் தீட்டிய சித்திரங்களை வியந்து கவிஞர்கள் கவிதை இயற்றுதலும் இயல்பேயாம். மேலைநாட்டு இலக்கியங்களில் மைக்கேல் ஏஞ்சலோ, ரஃபேல் என்னும் புகழ் மிகுந்த ஓவியர்களின் விளைவைக்காணலாம். அம் முறையில் கங்கைகொண்ட சோழபுரம் கோயிற் சிற்பங்களைச் சேக்கிழார் சுவாமிகள் பலகாற் கண்டு மகிழ்ந்து வியந்திருத்தல் கூடும். அதன் பயனாகவே,

''அண்டர் பிரானும் தொண்டர் தமக்
கதிப னாக்கி அனைத்தும்நாம்
உண்ட கலமும் உடுப்பனவும்
சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதம்தந்தோம்
என்றங்கவர் பொற்றட முடிக்குத்
துண்ட மதிசேர் சடைக் கொன்றை
மாலை வாங்கிச் சூட்டினார்.''

என்னும் பெரிய புராணச் செய்யுளைச் சேக்கிழார் அருளிச் செய்தனராதல் கூடும்.

**முடிவுரை :**

தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டிய முதலாம் இராசராச சோழனின் (கி.பி. 985-1014) புதல்வன் ஆகிய முதலாம் இராசேந்திர சோழன் (கி.பி. 1012-1014), தன் வடநாட்டுப் போர்களின் வெற்றிக்கு அறிகுறியாகப் புதிதாக அமைத்த அழகியதலைநகரமே 'கங்கைகொண்ட சோழபுரம்' ஆகும். இராசேந்திர சோழனுக்குப் பின்னர், முதலாம் இராசராசன் (கி.பி. 1044-1052), இரண்டாம் இராசாதிராசன் (கி.பி. 1052-1063), முதலாம் வீரராசேந்திரன் , (கி.பி. 1063-1069), அதிராசேந்திரன் (கி.பி. 1069-1070), முதலாம் குலோத்துங்கன் (கி.பி. 1070-1120), விக்கிரம சோழன் (கி.பி. 1118-1135) என்னும் அரசர்கள், வரிசை முறையே ஆட்சி நடத்தினர். அதன் பின்னர்ப் பட்டத்திற்கு வந்து முடிசூடிக் கொண்டு ஆட்சி செலுத்திய அரசனே, இரண்டாம் குலோத்துங்க சோழன். அவன் காலத்தில்தான் (கி.பி. 1135-1150) சேக்கிழார் பெருமான் வாழ்ந்தார் என்பது வரலாறு.

ஆதலின் சேக்கிழார் சுவாமிகள், கங்கைகொண்ட சோழபுரத்திற்குப் பற்பல முறைகள் சென்று தங்கியிருந்திருப்பார் ; அங்குள்ள கங்கை கொண்ட சோழேச்சுரர் கோயிலுக்குச் சென்று பலகால் வழிபட்டிருப்பார் ; அப்போதெல்லாம் அக்கோயிலில் அமைக்கப் பெற்றுத் திகழும் அழகின் மிகுந்த சண்டேசானுக்கிரக மூர்த்தச் சிற்பம், அவர்தம் கண்ணையும் கருத்தையும் பெரிதும் கவர்ந்திருக்கும். அதனை அவர் கண்டு வியந்து பெரிதும் மகிழ்ந்திருப்பார் என்று, நாம் எண்ணி இன்புறலாம். நாம் சேக்கிழார் பெருமானைக் காணும் பேறு பெறுவிடினும், அவர் கண்டு மகிழ்ந்த கங்கைகொண்ட சோழபுரத்து அழகிய சிற்பம் ஆகிய சண்டேசானுக்கிரக மூர்த்தியின் திருவுருவினையாதல், இன்றும் நாம் கண்டு மகிழலாம். **

# எண்குணத்தான்

—தமிழ் விரகன்.

**முன்னுரை :**

சிறந்த இலக்கியங்கள், தம்மை ஆழ்ந்து கற்குந் தோறும், கற்பார்க்குப் பல நுண்மைப் பொருள்களை விளக்கும் தன்மை வாய்ந்தன ; நவில் தொறும் அந்நூல்களின் நயம் பெருகும்; தொட்டனைத்து ஊறும் மணற்கேணி போல, அவற்றைக் கற்றனைத்தும் அறிவு ஊற்றெடுக்கும். 'அறிதோறு அறியாமை கண்டற்றால்' என்றபடி, அரிய பெரிய சிறந்த இலக்கியங்களைப் பயிலப் பயில, புதிய புதிய பொருள் உணர்வும் அனுபவமும் தோன்றிக் கொண்டே இருக்கும்.

நல்ல இலக்கியங்கள் என்பன உணர்த்திக் கொண்டு செல்லும் பொருட்டிறன்களுக்கு ஓர் எல்லையே இல்லை எனலாம். ''இதுவா அல்லது அதுவா என்ற நிலையில் இல்லாமல், இதுவும் அதுவும் பிறிதும் என்ற முறையில் அவற்றின் பொருட் குறிப்பானது பரந்து விரிந்து கொண்டே செல்லும்''. (*)

**கடலில் முத்து :**

இலக்கியம் என்பது, ஒரு பெருங்கடல். கடலைப் போலவே இலக்கியங்களும் மிக்க பரப்பும் ஆழமும் உடையவை. கடலின் அடியில் முத்துக்கள் மறைந்து கிடத்தல் போல, இலக்கியங்களின் உள்ளேயும் இனிய சிறந்த கருத்துக்கள் நிரம்பிச் செறிந்து திகழும். கடலின் அடியில் உள்ள முத்துக்களைப் பெற விரும்புவோர், அதன் அடியிற் சென்று அரும்பாடு பட்டு அவற்றைத் தேடிக் கண்டுபிடித்து, மேலே கரையிற் கொணர்ந்து பரப்பிப் பலருக்கும் விற்று மகிழ்வர். இலக்கிய அறிஞர்களும் சுவைஞர்களும் ஒரு வகையில் முத்துக் குளிப்பவர்களைப் போன்றவர்களேயாவர். இவர்களும் கவிதை அல்லது இலக்கியங்களின் ஆழத்திற்குச் சென்று, இனிய சிறந்த நல்ல பல கருத்துக்களை நுணுகி ஆராய்ந்து கண்டுணர்ந்து, பிறருக்கும் எடுத்துச் சொல்லி விளக்கி மகிழ்ச்சி விளைவிக்கின்றனர். இலக்கியக் கடலில் திளைத்து மூழ்கி ஆழ்ந்து நுணுகி ஆராய்ந்தால்தான், நாம் அரிய பல அழகிய நல்ல கருத்துக்களை உணர்ந்து கொண்டு பயன்பெற முடியும்.

**கச்சியப்பர் :**

இவ்வுண்மையை உணர்ந்தே, கல்வி நலனிற் சிறந்து கவிபாடும் திறனில் வல்ல கச்சியப்ப முனிவர் என்னும் கவிஞர் பெருமான், இலக்கியச் சுவைஞர்களின் இயல்பைக் கடலில் முத்துக் குளிப்பவர்களின் செயலுக்கு ஒப்பிட்டுப் பின்வரும் பாடலிற் கூறுவாராயினர்.

''ஆழ்ந்து பெருநூல் இடைக்கிடந்த
அரிய பொருளைப் பலர்கவர
வாழ்ந்த கருத்திற் பேரறிஞர்
வகுத்து விளக்கும் வகைபோன்று
வீழ்ந்த கருத்தின் நுளையர்குழாம்
வில்லிட் டிலகும் மணிபலவும்
தாழ்ந்த நெடுநீர்க் கடற்குளித்துத்
தடவுக் கரைஎங் கணும்நிரைப்பார்''
—திருவானைக்காப்புராணம்.

ஆசிரியர் திருவள்ளுவர் அருளிச் செய்த திருக்குறளில், 'கடவுள் வாழ்த்து' என்னும் பகுதியில் 'கோளில் பொறியிற் குணம் இலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை' என வரும் திருக்குறளை யாவரும் அறிவர். அதன் கண் பயின்றுள்ள 'எண்குணத்தான்' என்னும் இனிய தொடரை ஆராயத் தலைப்பட்டால், கடலிற் குளித்து முத்துக்களை எடுப்பார் போன்று, நாமும் பற்பல விழுமிய நல்ல கருத்துக்களைக் கண்டுணர்ந்து களித்துப் பயன் பெறலாம்.

**பரிமேலழகர் :**

உரையாசிரியர்களுள் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இலராய்ச் சிறந்து ஒளிரும் ஆசிரியர் பரிமேலழகர், ''எண்குணங்களாவன : தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது'' என விளக்கம் கூறியருளினர்.

இங்ஙனமே வைணவ சமயப் பெருமக்கள் நல்வினை தீவினை ஆகிய இரண்டும் இன்மை, மூப்பின்மை, இறப்பின்மை, துக்கமின்மை, பசியின்மை, தாகமின்மை, விரும்பியதனைத் தவறாமற்பெறுகை, நினைத்ததனை நிறைவேற்றுந் தன்மை என்னும் எட்டுக் குணங்கள் திருமாலுக்கு உண்டு எனக் கூறுவர்.

அருகதேவனை வழிபடும் ஆருகதர் ஆகிய சமணர்கள், 'எண்குணத்தான்' என்னும் இத்தொடருக்கு, கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா ஆற்றல், கடையிலா இன்பம், பெயரின்மை, குடியின்மை, ஆயுவின்மை, அழிவின்மை என்னும் எட்டுக் குணங்களை யுடையவன் என்று பொருள் கொள்வர்.



**எண்குணத்தான் :**

எனினும் 'எண்குணத்தான்' என்னும் தொடர், வேறு பிற பொருள்களையும் கூட உணர்த்துவதாக உள்ளது. அவற்றை ஒரு சிறிது ஈண்டுக் காண்போம்.

(1) 'சிந்திப் பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப் பொழிவன' என்று சான்றோர்கள் பலரும் அருளிச் செய்திருத்தலின், 'எண்ணி எண்ணி வியந்து உணர்ந்து மகிழ்தற்கு உரிய குணங்களை உடையவன்' எனவும், நாம் இத்தொடருக்குப் பொருள் கொள்ளலாம்.

(2) ''அடியார்க்கு அருள் செய்ய வருந்தி நம்பி'' எனவும், ''கள்ளத் தலைவர் துயர் கருதித் தம் கருணை வெள்ளத்து அலைவர்மிக'' எனவும் அருளுரைகள் காணப்படுதலின், இவ்வுயிர்த் திரள்கள் எல்லாம் ஈடேறி யுய்தல் வேண்டுமே என்று தன் பேரருட் பெற்றியினால், 'எண்ணி எண்ணி இரங்கி அருள்கின்ற குணத்தையுடையவன்' எனவும் இத்தொடர்க்கு நாம் பொருள் கொள்ளுதல் பொருந்தும்.

(*) "Words do not have either-or meanings in imaginative Poetry; they have and–and–and meanings. That is how Poetry works".
—**Hilary Corke.**

இக்கருத்துக்களையே ஒரு வகையில் தாமும் கொண்டவர்போலக் காளிங்கர் என்னும் உரையாசிரியர், இத்தொடருக்கு 'எண்ணப்பட்ட குணங்களை யுடையவன்' என உரை எழுதியிருக்கின்றார்.

*(3)* 'எண்பதத்தான் எய்தல் எளிதென்ப' *(குறள் 991)* என்புழி, எண்மை + பதம் என்பன, எண்பதம் என்றாயவாறுபோல, எண்மை+குணத்தான் என்பது, எண்குணத்தான் என்றாகிவரும் எனக்கொண்டு, 'எளிமைத் தன்மையைத் தனது இயல்பான குணமாக உடையவன்' என்று இத்தொடர்க்குப் பொருள் கூறுதலும் ஒரு வகையில் ஏற்புடைத்தாகும்.

''தெளிவந்த தேறலைச்
சீரார் பெருந்துறையில்
**எளிவந்து** இருந்திரங்கி
எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் உள்ளத்தின்
உள்ளே ஒளிதிகழ
அளிவந்த அந்தணனைப்
பாடுதுங்காண் அம்மானாய்''

''அருமையில் எளிய அழகே போற்றி''

என மாணிக்கவாசகர் போன்ற மாபெருஞ் சான்றோர்கள் பலரும், திருவாய் மலர்ந்தருளியுள்ள திருப்பாடல்கள் பலவும், இக் கருத்துக்கு அரண் செய்கின்ற மேற்கோட் சான்றுகளாக விளங்கும். இராமகிருஷ்ணாதி அவதாரங்களும், அர்ச்சைகளும் இறைவனின் எளிமைத் தன்மை (சௌலப்பியம்) ஆகிய இனிய பண்பினையே உணர்த்துவனவாகத் திகழ்தலும், ஈண்டுச் சிந்தித்துத் தெளிதல் தகும்.

*(4)* இனி, வேறொரு வகையாகவும் இத்தொடரின் பொருளை யாவரும் எண்ணி யுணரலாம். இக்குறள் 9ஆம் குறளாக அமைந்திருந்தலின், மேலே கூறி வந்த 8 குறள்களாலும் சுட்டப்பெற்ற குணங்களையெல்லாம், இக்குறளின்கண் தொகுத்துணர்த்தி முடித்துரைத்தார் ஆசிரியர் எனவும் கருத இடம் உளது. அங்ஙனம் கொள்ளின்,

1. ஆதிபகவன் ஆதல்.
2. வாலறிவுடைமை.
3. மலர்மிசை ஏகுதல்.
4. வேண்டுதல் வேண்டாமை இன்மை.
5. இருள்சேர் இருவினையும் சேராமை.
6. பொறிவாயில் ஐந்தவித்தல்.
7. தனக்கு உவமை இன்மை.
8. அறவாழியாம் அந்தண்மை.

என்னும் மேலை எட்டுக் குணங்களையுமே, இத்தொடர் தொகுத்துணர்த்திச் சுட்டி யுரைத்ததாகத் துணியலாம்.

**மணிவாசகர் :**

*(5)* மாணிக்கவாசகர், இறைவனின் அருமை பெருமைகளையும், அருளிச் செயல்களையும் விதந்து வியந்து பாடி மகிழும் தமது திருவாசகத்தில்,

''நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு
நிலாப் பகலோன்
புலனாய மைந்தனொடு **எண்வகையாய்ப்**
**புணர்ந்து நின்றான்**
உலகேழெனத் திசைபத்தெனத் தான்
ஒருவனுமே
பலவாகி நின்றவா தோள்நோக்கம்
ஆடாமோ''

என அருளிச் செய்துள்ள அருமைச் செய்யுளின்கண், இறைவனை 'எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்'' எனக் குறிப்பிடுகின்றார். 'எண் குணத்தான்' எனத் திருவள்ளுவர் வழங்கிய தொடர்க்குரிய பொருளை விளக்குவது போலும் முறையில், மாணிக்கவாசகரின் 'எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்' என்னும் அரிய தொடர் அமைந்து காணப்படுகின்றது. இந்த இரு தொடர்களையும் இயைபுபடுத்தி எண்ணி ஆராயுங்கால், இறைவனின் 'அட்ட மூர்த்தம்' (எண் வகையுருவம்) பற்றிய கருத்தை ஈண்டு நாம் கொள்ளுதலும் பொருத்தமாகும் எனத் தோன்றுகின்றது.

**அட்டமூர்த்தம் :**

''நான்முகனது முதற் படைப்பான நீரும், விதிப்படி தரப்படுகின்ற அவிப்பலியைத் தாங்குவனதான தீயும், அவியைத் தருகின்ற வனான இயமானனும், காலத்தை வரையறுக்கின்ற ஞாயிறு திங்களும், செவிப்புலனாகின்ற ஓசைக்கு நிலைக்களனாய் எங்கும் ஊடுருவி நிற்கும் விசும்பும், எல்லா வித்துப் பொருள்களையும் தன்கண் தோற்றுவிக்கின்ற நிலனும், எல்லா உயிர்களும் மூச்சு விடுதற்கு ஏதுவான காற்றும், என்கின்ற எண்வகை வடிவங்களுடன் விளங்கும் முதல்வனான சிவபெருமான், உங்களைக் காக்கக் கடவன்'' எனச் சாகுந்தல நாடகத்தின் தொடக்கத்திற் காளிதாசர் பாடியிருத்தலும் இங்குக் கருதுதற்கு உரியது.

''இருநிலனாய்த்தீயாகி நீரும்ஆகி
இயமான னாய்எறியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாய்அட்ட மூர்த்திஆகி''
—திருநாவுக்கரசர்.

''எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்
கொண்டே நின்றார்
விட்டார் உலகமென் றுந்தீபற
வீடே வீடாகுமென் றுந்தீபற''
—திருவுந்தியார்.

என்பன போலவரும் திருமொழிகள் பலவும், இக்கருத்தினை வலியுறுத்தும்.

''தீவளி விசும்பு நிலன்நீர் ஐந்தும்
ஞாயிறும் திங்களும் அறனும்.....'''

என வரும் பரிபாடல் வரிகள் *(3:4:5)* சிவபெருமான் மட்டுமேயன்றித் திருமாலும் அட்டமூர்த்தியாக அமைந்து திகழ்தலை அறிவிக்கும்.

**முடிவுரை :**

இதுகாறும் கூறிவந்தவாற்றால் 'எண்குணத்தான்' எனத் தெய்வப் புலவர் திருவள்ளுவர் வழங்கியருளிய தொடர், எத்துணை ஆழ்ந்த பல பொருட் குறிப்புக்களை உடையதாகத் திகழ்கின்றது என்பதனை இனிது உணரலாம்.

ஆழ்ந்து நுணுகி ஆராயுந்தொறும் அரிய பல கருத்துக்களை மேன்மேலும் அளிக்கவல்ல, திருக்குறள் போன்ற இத்தகைய சிறந்த செந்தமிழ்த் தெய்விக நூல்களைத், திறன் தெரிந்து ஆழ்ந்து நுணுகிக் கற்பது, நம்மனோர்க்குத் தலையாய கடமையாகும். இறைவன் திருவருள் அங்ஙனம் ஆழ்ந்து கற்று இன்புறும்படி நம்மனோர்க்குத் துணை புரிவதாக! —:o:—